# ஆழ்கடலில் ஆவி ராஜ்யம்

விக்கிரவாண்டி
வி. ரவிச்சந்திரன்

மின்னூலாக்கம் : செல்லா

**சபரீஷ் பாரதி**

புத்தகம் வெளியிடுவோர் & விற்பனையாளர்கள்

S-17, அரவிந்த்நரேன் என்கிளேவ்,
8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார்,
தி. நகர், சென்னை - 600 017.
✆: 2436 4243, 2432 2177

ஆழ்கடலில் ஆவி ராஜ்யம்
விக்கிரவாண்டி வி. ரவிச்சந்திரன்

முதற் பதிப்பு டிசம்பர், 2008
பக்கங்கள் 96

விலை : ரூ.30.00

வெளியிட்டோர்:
**SABARISH BHARATHI**
**Publishers & Book Sellers**
S-17. Arvind Narain Enclave,
8, Masilamani Street,
Pondy Bazaar,
T. Nagar, Chennai - 600 017.
☎: 2436 4243, 2432 2177

லேசர் **குட்வில் கம்ப்யூட்டர்ஸ்**, சென்னை-17.

அச்சிட்டோர் **சிக்மா கிராபிக்ஸ்**, சென்னை-5.

# பொருளடக்கம்





# 1. பேய்க்கடல் மர்மம்

**பெ**ர்முடா முக்கோணம் (**Bermuda Triangle**) என்று கேள்விப்பட்டுள்ளீர்களா?

அட்லாண்டிக் பெருங்கடலில் அமெரிக்காவின் ஃப்ளோரிடாவுக்கு கிழக்காகவும் தீர்க்கரேகைக்கு மேற்காக 40 டிகிரியிலும் - பெர்முடாத்தீவின் தெற்காகவும் உள்ள முக்கோணக் கடல் பகுதிக்குத்தான் பெர்முடா முக்கோணம் என்று பெயர்.

இந்தப் பகுதியின் முக்கியத்துவம் என்ன தெரியுமா? கடந்த பல நூறு ஆண்டுகளாக (இன்றும்) பெர்முடா முக்கோணப் பகுதியிலிருந்து விமானங்களும் கப்பல்களும் சிறு படகுகளும் அவற்றில் இருந்த மனிதர்களுடன் எந்த விதமான காரணமும் இல்லாமல் எந்த விதமான தடயமும் இல்லாமல் மறைந்து போய்விட்டன. காணாமல் போன விமானம் அல்லது கப்பல்களின் உடைந்த பகுதியோ அதில பயணம் செய்தவர்களின் உடல்களோ இதுவரையிலும் அகப்பட்டதே இல்லை.

## தொடர்பு இருந்தது

மறைந்துபோன பல விமானங்களில் இருந்த விமானிகள் கடைசி நிமிடம் வரையில் தரைக்கட்டுப் பாட்டு நிலையத்துடன் ரேடியோத் தொடர்பு கொண் டிருந்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

பெர்முடா முக்கோண பகுதிக்குள் வந்தவுடன் தங்களது விமானத்தின் கருவிகள் சரியாக இயங்க வில்லை என்றும் திசை காட்டும் கருவியின் முள் தாறு மாறாகச் சுற்றுகின்றன என்றும் இங்குள்ள ஆகாயப் பகுதி மஞ்சளாகவும் - பனிமூடிய நிலையிலும் தெளிவற்ற தாகவும் உள்ளது என்றும் பல விமானிகள் மறைவதற்கு கடைசி நிமிடத்திற்கு முன்பு தெரிவித்துள்ளனர். அங்கே என்ன நடந்தது என்பதை மட்டும் யாரும் சொல்லவில்லை!

ஆனால் இன்றளவும் காணாமல் போகும் நிகழ்ச்சிகள் தொடர்கின்றன. மற்றவர்களிடம் சொன்னால் நம்பமாட்டார்கள். கேலி செய்வார்கள் என்பதால் பொது மக்களும் பத்திரிகை மூலமாகச் செய்தி பரவினால் பயப் படுவார்கள் என்பதால் அரசாங்கமும் பல அமானுஷ்ய நிகழ்ச்சிகளை வெளியிடாமல் மறைத்து விடுகிறார்கள்.

இப்படி மூடி மறைக்கும் அளவுக்கு என்னதான் விநோதங்கள் அங்கு நிகழ்கின்றன?

## அணு யுத்தம் போல...!

இங்குள்ள கடல் நீர் ஜோதி ரூபமாக பிரம் மாண்டமாக எழும்புகிறதாம். மிகப் பெரிய காலிஃப்ளவர் வடிவத்தில் கடல் நீர் பொங்குகின்றதாம்.

பெரிய கப்பல்கள் தனக்குத்தானே இரண்டு மூன்று முறை சுழன்று விட்டுப் பிறகு தானாக நேராகியதாம்.

உக்கிரமான மின்னல்கள் பல வண்ணங்களில் தோன்றி அணுயுத்தம் நடப்பது போல பல விநாடி நேரங்கள் நிலையாக நின்றதாம்.

நேரம் காலம் இங்கு ஸ்தம்பித்துப் போவதாயும் இந்த முக்கோணத்தைக் கடக்கும் போது நேரமோ எரிவாயுவோ செலவழிவதில்லை என்றும் ஒரு சாரார் கூறுகின்றனர்.

தட்ப வெப்பத்தை ஆராயும் செயற்கைக் கோள்கள் **(Weather Satellites)** 800 மைல் உயரத்தில் பெர்முடா முக்கோணத்திற்கு மேல் பறக்கும் போது பலமுறை பழுதாகி விடுவதாகச் சொல்கிறார்கள்.

மேலும் இந்தப் பகுதியில் குறிப்பிட்டு அடையாளம் காட்ட முடியாத பறக்கும் - மிதக்கும் வாகனங்களை மக்கள் பார்த்ததாகப் பல செய்திகள் வருகின்றன.

## முன்னுக்குப்பின் முரண்

இவற்றுக்கெல்லாம் சரியான விளக்கங்களைத் தருவதற்கு ஆராய்ச்சியாளர்கள் முயற்சி செய்து வருகிறார்கள் ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான காரணங்களைத்தான் கூறுகிறார்கள்.

கடலுக்கு அடியில் எரிமலை இருக்கலாம். அது வெடித்துக் கடல் நீரைப் பொங்கி எழச் செய்திருக்கலாம். அதிலிருந்து வெளிவந்த ஜுவாலைப் பந்தை மனிதர்கள் பார்த்துப் பயந்திருக்கலாம். அந்த வெடிப்பு அடங்கும்

போது ஏற்படும் ஈர்ப்புச் சக்தியினால் கப்பல்களும், படகுகளும் உள்ளுக்குள் இழுத்துக் கொள்ளப்பட்டிருக் கலாம் அல்லது காலம் இங்கு மற்றொரு பரிமாணமாகச் செயல்படலாம். ஒருவேளை வேறு கிரகத்திலிருந்து நம்மைக் காண வரும் விண்வெளி வாகனங்களின் செய்கையாகவும் இது இருக்கலாம் என்றெல்லாம் கூறுகிறார்கள். ஆனால் இவர்களில் யாருமே விமானங்கள் ஆகாயத்திலேயே மறைந்த காரணங்களை விளக்க வில்லை.

## ஒரு சிறிய பரிசோதனை

பெர்முடா முக்கோணப் பகுதியில் மிக மிகச் சக்தி வாய்ந்த ஒரு காந்த மண்டலம் பல மைல் அளவிற்குப் பரவி உள்ளது. இந்தக் காந்த சக்திதான் கப்பல்களையும் விமானங்களையும் தன்னை நோக்கி இழுத்துக் கொள்கிறது என்றும் பல ஆராய்ச்சியாளர்கள் கருதினார்கள்.

இது சரியான கருத்துதானா என்று அறிவதற்காக முற்றிலும் பிளாஸ்டிக்கினால் ஆன சிறிய படகுகளை உருவாக்கி இந்த முக்கோணப் பகுதியினுள் செலுத்திப் பார்த்தனர்.

என்ன ஆச்சரியம்!

இரும்புக் கப்பல்களை கவிழ்த்த மாதிரியே பிளாஸ்டிக் படகுகளையும் பெர்முடா முக்கோணத்தின் மர்மச் சக்தி கவிழ்த்து விட்டது. இது நடந்தது 1970-ஆம் ஆண்டில்.

இந்தப் பகுதியில் விஞ்ஞானத்திற்கும் அப்பாற் பட்ட ஒரு சக்தி இயங்குகிறது. இறந்தவர்களின் ஆவிகள் கூட்டமாக இந்தப் பகுதியில் வாழ்கின்றன. அவை தான் கப்பல்களையும் விமானங்களையும் விழுங்கு கின்றன என சிலர் கூறினார்கள்.

ஆனால், பேய் பிசாசுகளில் நம்பிக்கையில்லாத ரஷ்ய நாட்டு ஆராய்ச்சியாளர்களில் சிலர் எப்படியாவது இந்த முக்கோணத்தின் மர்மத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று ஆவல் கொண்டனர். இதன் விளைவாக 1982-ஆம் ஆண்டில் ரஷ்ய ஆராய்ச்சியாளர்கள் குழு ஒன்று 'விட்யாஸ்' என்ற கப்பலில் இந்த முக்கோணத்தை நோக்கிப் புறப்பட்டது.

## நல்ல நீர்க் கடல்

பெர்முடா முக்கோணம் அருகே கப்பலை இந்தக் குழு நிறுத்திவிட்டு அங்கிருந்தபடியே தனது ஆராய்ச்சி களைத் தொடங்கியது. அட்லாண்டிக் கடலின் மற்ற பகுதியில் தண்ணீர் தெள்ளத் தெளிவாகவும் குடிக்கக் கூடிய நிலையில் உப்பு இல்லாமல் இருப்பதாகவும் இந்தக் குழு கண்டு பிடித்தது. கடலின் நடுவில் நல்ல தண்ணீர் எப்படி வந்தது என்று இவர்களாலும் கண்டு பிடிக்க முடியவில்லை.

மேலும் இந்தக்குழு சென்றிருந்த கப்பலில் பொருத்தப்பட்டிருந்த புயல் எச்சரிக்கைக் கருவி திடீ ரென்று செயல்பட மறுத்ததாம். பிறகு கடல் அமைதியாக இருக்கும் போதே அந்தக் கருவி புயல் வீசுகிறது என்று

காட்டியதாம். கப்பலில் இருந்தபடி கரையில் உள்ள மற்றவர்களுடன் பேச உபயோகிக்கப்படும் கம்பியில்லாத தந்திக் கருவியும் திடீரென்று செயல்படவில்லை. அத்துடன் அந்தக் கப்பலில் இருந்தவர்களுக்குப் பல்வேறு வகையான உடற்கோளாறுகள் ஏற்பட்டன.

இத்தகைய கஷ்டங்களைத் தாங்கிக்கொண்டு ஆறு நாட்கள் அங்கு தங்கி ஆராய்ச்சி செய்து திரும்பிய ரஷ்ய ஆய்வாளர்கள் பின்வரும் கருத்தைத் தெரிவித்தனர்.

## மர்மம் மர்மமே!

காற்று மண்டலத்தில் சூறாவளி உற்பத்தியாவது போல் பெர்முடாப் பகுதியில் பயங்கரமான நீர்ச்சுழல்கள் உருவாகி நிரந்தரமாக உள்ளன. இவையே கப்பல்களைக் கவிழ்த்து விடுகின்றன. முக்கோணத்தின் மேற்பகுதியில் பலம் மிகுந்த சூறாவளி ஒன்று அமைதியாக ஆனால் நிரந்தரமாக வீசிக் கொண்டிருக்கிறது. அவை விமானங்களை விபத்துக்குள்ளாக்கலாம் என்று கூறினார்கள்.

இப்படி ஏதோ ஒரு காரணத்தினால் இந்த விபத்துக்கள் நிகழ்வதாக நாம் வைத்துக் கொண்டாலும் விபத்தினால் உடைந்த கப்பலின் பாகங்களோ இறந்த மனிதர்களின் உடல்களோ கிடைத்திருக்க வேண்டுமல்லவா? அவை எங்கே எப்படி மறைந்தன? ரஷ்யர்களும் இதற்கான பதில்களைச் சொல்லவில்லை.

ஆக மொத்தத்தில் பெர்முடா முக்கோணம் ஒரு மர்ம முக்கோணமாகவே இருந்து வருகிறது.

# 2. விந்தையாக மறைந்த விமானங்கள்

**பெ**ர்முடா முக்கோணக் கடலைப் பற்றி வெளி உலகம் முழுமையாக அறிய ஆரம்பித்தது 1945-ஆம் ஆண்டு டிசம்பர் 5-ஆம் தேதியன்று தான். அன்றைய நாளில் லாடர்டேல் (Lauderdale) என்ற ராணுவத் தளத்திலிருந்து ஐந்த சண்டை விமானங்கள் ஒன்றாகப் புறப்பட்டன. ஃப்ளைட்-19 என்ற பிரிவைச் சேர்ந்த இந்த விமானங்கள் வழக்கமான ரோந்துப் பணிக்காகவே அன்று அனுப்பப் பட்டன.

ஒவ்வொரு விமானத்திலும் ஒரு விமானியும் இரண்டு போர் வீரர்களும் இருந்தனர். ஒரு விமானத்தில் மட்டும் ஒரே சிப்பாய் தான் இருந்தார். ஆக மொத்தம் 14 பேர் அவற்றில் இருந்தனர் அமெரிக்காவின் கடற் படைப் பிரிவில் Navy Grumman TBM-3 AVENGER TORPEDOBOMBERS ரக விமானங்களான அவை அன்று மதியம் சரியாக இரண்டு மணிக்குப் புறப்பட்டன. ஆயிரம் மைல் பறப்பதற்கு வேண்டிய எரிபொருள் ஒவ்வொரு விமானத்திலும் நிரப்பப்பட்டிருந்தது.

## அனுபவம் மிக்கவர்

அந்த விமானங்களுக்குத் தலைமை தாங்கிச் சென்றவர் லெப்டினனட். சார்லஸ் டெய்லர் (Charles Taylor) என்பவர். இவர் 2500 மணி நேரம் பறந்துள்ள அனுபவம் பெற்றவர். வடக்குப் பிமினியின் (North Bimini) அருகில் விமானங்களைக் கொண்டு சென்று வழக்கமான பயிற்சிக் கட்டளைகளை பிறப்பித்துக் கொண்டிருந்தார் அவர். வானம் தெளிவாக இருந்தது. காற்றும் சாதகமாக இருந்தது. வழக்கத்திற்கு மாறாக ஏதோ நடக்கப் போகிறது என்று விமானிகளோ மற்ற வீரர்களோ கொஞ்சமும் சந்தேகப்படவில்லை.

சரியாக மதியம் மூன்று மணி பதினைந்து நிமிடங் களுக்கு லாடர்டேல் தளத்திலிருந்த ரேடியோ ஆப ரேட்டர் விமானிகளின் செய்திக்காகக் காத்திருந்தார் அவை பயிற்சி பெறும் விவரம் பறக்கும் நேரம் இறங்கும் நேரம் முதலியவற்றைப் பற்றிய விவரங் களைத் தலைமை விமானி ராணுவ தளத்திற்கு அறிவிக்க வேண்டும் என்பது பொது நியதி, ஆனால் இந்த வழக் கத்திற்கு மாறாக அவசரச் செய்தி ஒன்று வந்தது.

## பார்க்க முடியவில்லை

நான் லெப்டினண்ட் டெய்லர் பேசுகிறேன்... நான் பேசுவது கேட்கிறதா? மிகவும் அவசரம்... Calling Tower... Calling Tower... ஓவர்.

நீங்கள் பேசுவது கேடகிறது. உங்களது செய்தியை உடனே சொல்லுங்கள்.

எங்களால் எதையுமே பார்க்க முடியவில்லை. நிச்சயமாகச் சொல்கிறேன். எங்களுக்கு எதுவும் தெரிய வில்லை.

நீங்கள் பறக்கும் இடத்தையும் டிகிரியையும் குறிப்பிடுங்கள்.

எந்த இடத்தையும் என்னால் குறிப்பிட முடியாது... நாங்கள் எங்கே இருக்கிறோம் என்பதே புரியவில்லை.

விமானத்தை மேற்கு நோக்கித் திருப்புங்கள்.

எந்தப் பக்கம் மேற்குத் திசை என்றே புரிய வில்லையே. இங்கு எல்லாமே விசித்திரமாக உள்ளது. திசைகளை அறிய எங்களால் முடியவில்லை. கீழே உள்ள கடல் கூட வழக்கத்திற்கு மாறாக உள்ளது.

உடனடியாக லாடர்டேல் ராணுவ தளத்தின் தலைமை அதிகாரிக்குச் செய்தி பறக்கிறது. அவர் வந்து விமானி களுடன் பேசுகிறார். அப்போது மணி மூன்று முப்பது. அவரிடமும் தலைமை விமானி தங்களால் எதையும் உணர முடியவில்லை என்பதை வற்புறுத்துகிறார்.

“எனது விமானத்தின் திசைகாட்டி முள் தாறுமாறாகச் சுற்றுகிறது. லாடர்டேல் எங்கிருக்கிறது என்று அறிவதற்கு முயற்சி செய்வோம்” என்கிறார்.

அதன் பிறகு நேரம் ஆக ஆக விமானத்திலிருந்து செய்திகள் வருவது நின்றது. விமானங்களும் ரேடாரில் தெரியவில்லை.

## மீட்பு விமானம்

அந்த ஐந்து விமானங்களும் விபத்துக்குள்ளாகி இருக்க வேண்டும் என்று ராணுவ அதிகாரிகள் முடிவு செய்தனர். காணாமல் போன அந்த விமானங்களில் இருந்தவர்களைத் தேடிப்பிடித்துக் காப்பாற்றுவதற்காக மார்ட்டின் மாரினர் (MARTIN MARINER) என்ற விமானம் உடனே அனுப்பப்பட்டது. கடலில் எந்த இடத்தில் வேண்டு மானாலும் இறங்கும் படியான மிதக்கும் அமைப்பு அந்த விமானத்தில் இருந்தது. இரட்டை எஞ்ஜின்களைக் கொண்ட அந்த விமானத்தில் விமானி உள்பட மொத்தம் பதின்மூன்று பேர் சென்றனர்.

மாலை நான்கு மணிக்குத் திடீரென்று விமானி சார்லஸ் டெய்லரின் குரல் கேட்டது. நாங்கள் எங்கிருக் கிறோம், என்று இன்னும் புரியவில்லை. ராணுவ தளத்தி லிருந்து வடகிழக்காக 225 மைல் தூரத்தில் இருக் கிறோம் என்று நினைக்கிறேன். வெள்ளைத் தண்ணீரில் நுழைகிறோம்... நாங்கள் அனைத்தையும் இழந்து விட்டோம்... (இதன் பிறகு பேச்சு நின்று விட்டது)

## அதையும் காணவில்லை

இதற்கிடையில் மீட்புக்காகச் சென்ற மார்ட்டின் மாரினரின் விமானி ஆறாயிரம் அடி உயரத்தில் பலத்த காற்று வீசுவாதாயும் விமானம் தள்ளாடுவதாயும் தெரிவித்தார். இதுதான் அவரிடமிருந்து வந்த கடைசி செய்தி. இதன் பிறகு இந்த விமானமும் ரேடாரில் மறைந்துவிட்டது. முதலில் சென்ற ஐந்து விமானங்கள்

அவற்றைத் தேடிச்சென்ற ஒரு விமானம் இந்த ஆறு விமானங்களின் கதி என்ன?

இரவு ஏழு மணிக்கு மியாமியிலுள்ள ஓப-லோகா (Opa-Locka) கடற்படைத்தள ரேடியோவில் FT... FT என்று தேய்ந்து போனகுரல் ஒலித்தது. அது ஃப்ளைட்-19 அணியைக் குறிக்கும் சங்கேத எழுத்துக்களாகும். இந்தக் குரல் காணாமல் போன விமானங்களிலிருந்து வந்திருக்கு மானால் அவை இன்னமும் எங்கேயோ பறந்து கொண் டிருக்கின்றன என்று அர்த்தம். ஆனால் இவ்வளவு நேரம் பறப்பதற்கான பெட்ரோல் அவற்றில் இல்லையே! அப்படியால் அவை எப்படி? எங்கிருந்து செய்தியை அனுப்புகின்றன? யாருக்கும் ஒன்றும் புரியவில்லை. அன்று இரவு மிகவும் இருளாக இருந்தாலும் பனிமூட்டம் அதிகமிருந்ததாலும் தேடும் படலம் நிறுத்தப்பட்டது.

## பெரிய அளவு முயற்சி

மறுநாள் காலையில் சரித்திரத்திலேயே இல்லாதபடி பெரிய அளவில் தேடும் முயற்சிகள் ஆரம்பித்தன. இதில் 240 விமானங்களும் 18 கப்பல்களும் ஈடுபடுத்தப்பட்டன. சாலமன்ஸ் என்ற விமானத்தாங்கிக் கப்பல் 67 விமானங் களுடன் உதவிக்காகத் தயாராக நின்றிருந்தது. இவற்றைத் தவிர இரண்டு நீர்மூழ்கிக் கப்பல்களும் அநேக தனியார் விமானங்களும் படகுகளும் கூட தேடும் முயற்சியில் ஈடுபட்டன.

காலை முதல் மாலை வரையில்- கடல் நீருக்கு மேல் மூன்னூறு அடி உயரத்தில் தினமும் 167 முறை குறுக்கும்

நெடுக்குமாக விமானங்கள் பறந்து தேடின. மொத்தம் 4100 மணி நேரம் தொடர்ந்து தேடும் முயற்சிகள் நடநதன. 3,80,000 சதுர மைல் பரப்பளவில் தேடினார்கள்.

காணாமல் போன அந்த விமானங்களின் உடைந்த துண்டுகளோ அல்லது விமானிகளின் உடல்களோ கிடைக்காதா என்று அலைந்தார்கள். ஃப்ளோரிடா மற்றும் பஹாமாஸ் கடற்கரையில் இரவும் பகலும் கண்காணிக்கப் பட்டன. ஆனால் எந்தவிதமான பலனும் கிடைக்கவில்லை. விமானங்கள் மறைந்த விதத்தைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை.

## மர்ம ஒளி

விமானிகள் மறைந்த நாளில் இரவு 7 மணிக்கு வானத்தில் ஓர் ஒளியைப் பார்த்ததாக வர்த்தகக் கப்பல் ஒன்றின் கேப்டன் பிறகு தெரிவித்தார். ஒருவேளை அவைகள் ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டு கடலில் வீழ்ந்திருக்கலாமோ?

அப்படியானால் விமானத்தின் சிதறல்கள் இருக்க வேண்டுமே. இல்லையே, அப்படியில்லாவிட்டால் ரேடியோச் சாதனங்கள் பழுதடைந்த நிலையில் விமானங் களைக் கடலில் இறக்க வேண்டிய நிர்ப்பந்தம் அவர் களுக்கு ஏற்பட்டிருக்குமோ?

அப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டால் விமானங் களிலிருந்து 60 வினாடிகளுக்குள் வெளியேறித் தப்பித்துக் கொள்ளும் விதத்தில் அவர்கள் அனைவருமே பயிற்சி

பெற்றுள்ளார்கள். அப்படித் தப்பித்திருந்தால் அவர்களில் ஒருவராவது கடலில் மிதந்து கொண்டிருக்க வேண்டு மல்லவா? அப்படியும் இல்லையே.

எனவே, எந்தப் பயனும் இல்லாததால் தேடும் முயற்சிகள் கைவிடப்பட்டு ஓர் உயர் மட்டக் குழு விசாரணைக்காக நியமிக்கப்பட்டது. அதுவும் ஏதோ சம்பிரதாயப்படி விசாரணையை நடத்தி முடித்துக் கொண்டது.

## மீண்டும் அஃதே

இதன் பிறகு 1947-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 3-ஆம் தேதி அமெரிக்க விமானப்படையைச் சேர்ந்த C-54 ரக விமானம் ஒன்று ஆறு வீரர்களுடன் பெர்முடாவி லிருந்து போரிசன் என்ற இடத்திற்குப் பயணம் செய்தது. பெர்முடாவிலிருந்து நூறாவது மைலில் அந்த விமானமும் மறைந்துவிட்டது.

உடனடியாகக் கடற்படை விமானப்படை கரை யோரக் காவல் படை அனைத்தும் முடுக்கி விடப்பட்டன. ஒரு லட்சம் சதுர மைல் பரப்பளவிற்குக் கடலில் தேடி னார்கள் வழக்கம் போல் எந்தத் தடயமும் கிடைக்க வில்லை. இந்த நிகழ்ச்சியினால் அமெரிக்காவே அல்லோலகல்லோலப்பட்டது. ஒரே மாதிரியான இரண்டு விபத்துக்கள். இரண்டிலும் எந்த விதமான அடையாளமும் இல்லை. இதனால் ராணுவ அதிகாரிகள் பலமுறை நிருபர்களின் கேள்விகளுக்குப் பதில் சொல்லமுடியாமல் விழித்தார்கள்.

## தளபதி மறைந்தார்

29-1-1948 அன்று ஸ்டார் டைகர் (Star Tiger) என்ற பிரிட்டிஷ் விமானம் ஒன்று 25 பயணிகளுடனும் 6 சிப்பந்திகளுடனும் இந்தப் பகுதிக்கு அருகில் பறந்து வந்தது. இரண்டாம் உலகப் போரின்போது பிரிட்டனின் விமானப் படைத்தளபதியாக இருந்த ஏர்மார்ஷல். சர். ஆர்தர் கன்னிங்ஹாம் (Air Marshal Sir Arthur Cunningham) என்பவரும் அந்தப் பயணிகளுள் ஒருவர்.

பெர்முடாவிலிருந்து வடகிழக்காக 380 மைல் தூரத்திலிருந்தபோது அதன் விமானி தரை நிலையத்துடன் பேசினார். காற்றும் சீதோஷ்ணமும் அற்புதமாக உள்ளன. விமானம் சீராகப் பறந்து கொண்டிருக்கிறது. நாங்கள் இறங்குவதற்காகக் குறிப்பிட்டிருக்கும் நேரத்தில் தவறாமல் வந்து சேருவேன் என்று நம்புகிறேன் என்று கூறினார்.

இதுவே தனது கடைசி செய்தியாக இருக்கும் என்று அந்த விமானி கொஞ்சமும் எதிர்பார்த்திருக்கவே மாட்டார். குறிப்பிட்ட நேரப்படியோ அல்லது அதன் பிறகோ அந்த விமானம் வந்து சேரவே இல்லை.

மறுநாள் காலையில் முப்பது விமானங்களும் - பத்து கப்பல்களும் அந்தக் கடற்பகுதி முழுவதையும் தேடி அலசிவிட்டன. ஸ்டார் டைகர் மறைந்த விதம் தெரியவே யில்லை. அதற்கும் மறுநாள் காலிப் பெட்டிகள் சிலவும் பெடரோல் டின்களும் கடலில் மிதந்து கொண்டிருந்தன. ஆனால் அவை காணாமல் போன விமானத்திலிருந்து தான் விழுந்தன என்பதற்கு எந்தவித அத்தாட்சியும் இல்லை.

பிரிட்டிஷ் அரசாங்கம் லார்டு மேக்மில்லன் (Lord Macmillan) என்பவரது தலைமையில் ஒரு விசாரணைக் குழுவை அமைத்தது. அந்தக் குழுவும் இன்று வரை எந்தவிதமான முடிவையும் அறிவிக்கவில்லை.

## ஸ்டார் ஏரியலின் கதி

ஸ்டார் டைகர் காணாமல் போய் ஓராண்டு முடிவடைவதற்குச் சரியாய் பன்னிரண்டு நாட்களுக்கு முன்பு அதாவது 17-1-1949 அன்று ஸ்டார் ஏரியல் (Star Ariel) என்ற விமானமும் 15 பயணிகளுடனும் 7 சிப்பந்திகளுடனும் மறைந்துவிட்டன. லண்டனிலிருந்து வந்த இந்த விமானம் பெர்முடாவில் இறங்கி பெட்ரோல் நிரப்பிக் கொண்டு காலை 7-45க்குப் புறப்பட்டது. இதிலிருந்து சரியாக ஐம்பது நிமிடம் கழித்து கேப்டன், மக்பீ (Mcphee) பெர்முடாவுடன் ரேடியோத் தொடர்பு கொண்டு எல்லாம் சரியாக உள்ளது; எந்தவிதப் பிரச்சினையும் இல்லை என்று அறிவித்தார் அதன் பிறகு ஸ்டார் ஏரியலைப் பற்றி தகவலே இல்லை.

இந்த முறையும் தேடும் முயற்சிகள் பெரிய அளவில் நடைபெற்றன. 72 விமானங்களும் இரண்டு விமானந்தாங்கிக் கப்பல்களும் இதில் ஈடுபடுத்தப்பட்டன. அட்லாண்டிக் கடல் பகுதியில் அப்போது மிதந்து கொண்டிருந்த அனைத்துக் கப்பல்களுக்கும் ரேடியோச் செய்திகள் அனுப்பப்பட்டன. மொத்தம் 1,50,000 சதுர மைல் பரப்பளவில் தேடிய பிறகு முயற்சிகள் கைவிடப்பட்டன. வழக்கம்போல் கமிட்டி - விசாரணை- ஆகிய அனைத்தும் நடைபெற்றன. ஆனால் பலன்...?

## விளக்குகள் தெரிகின்றன

இதில் மற்றோர் அம்சம் என்னவென்றால் ஸ்டார் ஏரியல் மறைவதற்கு ஒரு வாரம் முன்புதான் சாட்டர்டு விமானம் ஒன்றைத்தேடும் பணிகள் முடிந்திருந்தன. அதாவது 28-12-1948 அன்று 36 நபர்களுடன் சார்ட்டர்டு Dc-3 ரக விமானம் ஒன்று சான்ஜூரவானிலிருந்து மியாமிக்குச் சென்று கொண்டிருந்தது. அதிகாலை மணி 4-13க்கு அதன் விமானி கடைசியாப் பேசினார்.

“நாங்கள் தெற்கில் ஐம்பது மைல் தூரத்தில் வந்து கொண்டிருக்கிறோம். மியாமியினுடைய விளக்குகள் மங்கலாகத் தெரிகின்றன. இறங்குவதற்கான விவரங் களுக்காகக் காத்திருக்கிறேன்.”

இதுதான் அவரது கடைசிப் பேச்சு. இதன் பிறகு அந்த விமானம் மறைந்து விட்டது. வழக்கம் போல ராணுவ விமானங்களும் கப்பல்களும் அதைத் தேடித் தேடி அலுத்துப் போயின.

இதையடுத்து சிறிய விமானங்கள் பல மறைந்ததாகச் செய்திகள் வெளியாயின. 1949-ஆம் ஆண்டில் மட்டும் ஒன்பது சிறிய விமானங்கள் இங்கு மறைந்துள்ளன.

## மறைதல் தொடர்கின்றது

1950-ஆம் ஆண்டு மார்ச் மாதம் அமெரிக்காவி லிருந்து அயர்லாந்துக்குச் சென்று கொண்டிருந்த விமானம் ஒன்று பெர்முடாவின் வடக்கு மூலையிலிருந்து மறைந்து விட்டது.

2-2-1952 அன்று பிரிட்டனைச் சேர்ந்த போக்கு வரத்து விமானம் ஒன்று 33 பயணிகளுடன் அதே வடக்கு மூலையிலிருந்து மறைந்தது. ஆபத்து நேரத்தில் உதவி கேட்டு அனுப்பப்படும் அவசர சமிக்ஞைகள் இந்த விமானத்திலிருந்து மிகவும் பலஹீனமாக ஒலித்து உடனே மறைந்துவிட்டன.

30-10-1954 அன்று அமெரிக்கக் கடற்படையின் விமானம் ஒன்று 42 வீரர்களுடன் மேரிலாந்து செல்லும் வழியில் மறைந்தது.

5-4-1956 அன்று B-25 ரக விமானம் ஒன்று மூன்று பேர்களுடன் கடலில் வீழ்ந்து மூழ்கியது. இந்த விமானம் மட்டும் மாயமாக மறையாமல் விபத்துக்குள்ளாகியது.

ஆனால் அதே ஆண்டு நவம்பர் 9-ஆம் தேதி கடற்படையின் ரோந்து விமானம் ஒன்று (P5 M மாடல்) பத்து வீரர்களுடன் ரோந்து சுற்றும் போது மாயமாய் மறைந்தது.

8-1-1962 அன்று KB-50 என்ற டேங்கர் (Tanker) விமானம் ஒன்று வர்ஜீனியாவிலிருந்து அஜோர்ஸ் போகும் வழியில் பெர்முடாவில் மறைந்தது.

## ஜெட் விமானமும்...

28-8-1963 அன்று நான்கு இஞ்ஜின்களைக் கொண்ட KC-35 ரகத்தைச் சேர்ந்த ஜெட் விமானங்கள் இரண்டு இங்கு மறைந்தன. முதல் முதலாக ஜெட் விமானங்கள் மறைந்ததால் மீண்டும் அதிகப் பரபரப்பு ஏற்பட்டது.

பெர்முடாவிலிருந்து தென் மேற்காக 300 மைல் தூரத்திலிருந்த போது கடைசியாக அதன் விமானிகள் பேசினார்கள். பிறகு அவை மறைந்துவிட்டன.

ஆகாயத்திலேயே அவை ஒன்றுக்கொன்று மோதி விபத்துக்குள்ளாகி இருக்கும் என்று நினைத்தார். ஆனால் தரை நிலையத்திலிருந்தவர்கள் அதை மறுத்தனர். ஏனெனில் போதுமான அளவு இடைவெளியில் பாது காப்பாக அவை பறந்து கொண்டிருந்ததை ராடாரில் பார்த்ததாக அவர்கள் கூறினார்கள். இப்படிப் பல விதமான அபிப்பிராய பேதங்கள் தோன்றினாலும் இந்த விமானங்கள் மறைந்ததற்கான காரணங்களை யாராலும் கூற முடியவில்லை.

இதன் பிறகு ஒரு மாதம் கழித்து செப்டம்பர் 22-ஆம் தேதி C-132 ரக கார்கோமாஸ்டர் விமானம் இங்கு மறைந்தது. ஜெர்ஸிக் கரையிலிருந்து எண்பது மைல் தொலைவிலிருந்து இதன் விமானி கடைசியாகப் பேசினார். மூன்று தினங்கள் இரவும் பகலும் இந்த விமானத்தைத் தேடினார்கள். பலன் இல்லை.

இதற்கடுத்து 5-6-1965 அன்று ஃப்ளையிங்பாக்ஸ்கார் **(Flying Box Car)** என்ற விமானம் பத்து நபர்களுடன் தனது வழக்கமான பணியில் ஈடுபட்டிருந்தபோது மறைந்து விட்டது. C-119 என்ற ரகத்தைச் சேர்ந்த இந்த விமானம் கிராண்ட் டர்க் **(Grand Turk)** என்ற இடத்திற்குச் செல்லும் வழியில் பஹாமாஸ் அருகில் மறைந்தது. இந்த விமானத்தைத் தேடும் முயற்சிகளும் தோல்வியடைந்தன.

## பெண் விமானி மறைந்தார்

1945-ஆம் ஆண்டு முதல் 1965 வரையில் வர்த்தக விமானங்கள் மட்டும் 15 இங்கு மறைந்துள்ளன. இதைத் தவிர அனேக ராணுவ விமானங்களும் மறைந்துள்ளன. தனியார் விமானத்தை ஓட்டி வந்த ஒரு பெண் விமானி கூட இங்கு மறைந்துவிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

கரோலின் கேஷியோ (CAROLYN CASCIO) என்ற இந்தப் பெண் முறைப்படி லைசன்ஸ் பெற்ற விமானி. 7-6-1964 அன்று ஒரு சிறிய விமானத்தை அவர் ஓட்டிக் கொண்டு வந்தார். நள்ளிரவு நஸ்ஸாவு (Nassau) என்ற இடத்திலிருந்து கிராண்ட் டர்க் என்ற தீவை நோக்கி அந்த விமானம் சென்று கொண்டிருந்தது. அந்த தீவை நெருங்கியவுடன் அவர் தரை நிலையத்துடன் தொடர்பு கொண்டு தன்னால் எதையும் பார்க்க முடியவில்லை என்றும் விமானத்திலிருந்து பார்த்தால் கீழே எதுவும் தெரியவில்லை என்றும் அறிவித்தார்.

ஆனால் தரையிலிருந்து பார்த்தபோது கிராண்ட் டர்க் தீவின் மேல் அந்தச் சிறிய விமானம் வட்டமிடுவது அனைவருக்கும் தெரிந்தது. அரை மணி நேரம் வரையில் இப்படிச் சுற்றிய அந்த விமானமும் திடீரென்று மறைந்து விட்டது. பிறகு அதை யாராலும் கண்டுபிடிக்க முடிய வில்லை. அந்தப் பெண்ணின் கதியும் தெரியவில்லை, தரையில் உள்ளவர்களால் விமானத்தைக் காண முடிந்தது. ஆனால் விமானத்திலிருந்து தரையைக் காணமுடிய வில்லை. ஏன் இப்படி நிகழ்ந்தது என்று இன்று வரை யாருக்கும் தெரியவில்லை.

இதன் பிறகு 11-1-1967 அன்று YC-122 ரக விமானம் நான்கு நபர்களுடன் பஹாமாஸிலிருந்து ஃப்ளோரிடா நோக்கி வந்து கொண்டிருந்த போது பிமினியின் வட மேற்குத் திசையில் மறைந்தது.

1973-ஆம் ஆடு ரினோ ரிகோனி (Reno Rigoni) என்ற விமானமும் மறைந்துள்ளது. 1974-இல் கூட ஒரு விமானம் மறைந்தது. இதிலிருந்து இந்த மர்மம் தொடர்ந்து கொண்டுதான் உள்ளது.

பெர்முடா முக்கோணப் பகுதியில் பறந்து செல்லும் அனைத்து விமானங்களும் மறைந்து விடுவதில்லை. ஆனால் எல்லா விமானங்களுமே பத்திரமாக இந்தப் பகுதியிலிருந்து வெளியேறும் என்ற உத்தரவாதமும் இல்லை. எனவே இன்றையளவும் பல விமானங்கள் பெர்முடா முக்கோணப் பகுதியைச் சுற்றிக் கொண்டுதான் செல்கின்றன.

விஞ்ஞானம் மிகவும் முன்னேறிவிட்ட தற்காலத்தில் கூட இப்படி விமானங்கள் மறைகின்றனவா? மறைந்த விமானங்களைக் கண்டுபிடிக்கக் கூட முடியவில்லையா என்று நீங்கள் திகைக்கலாம்.

## விஞ்ஞானம் உதவவில்லை

29-12-1972 ஆம் நாளில் அமெரிக்காவின் ஈஸ்டர்ன் ஏர் லைன்ஸைச் சேர்ந்த ஹாக்ஹீட் (Hock heed L-1011) ரக விமானம் ஒன்று 100 பயணிகளுடன் மியாமி தளத்திற்கு மிக அருகாமையில் மறைந்து விட்டது. இது ஒரு நவீன ரக

விமானம் இதிலேயே பல விஞ்ஞான உபகரணங்கள் பாதுகாப்புக் கருவிகள் அந்த விமானம் மறைவதைத் தடுக்கவோ மறைந்த விமானத்தைக் கண்டுபிடிக்கவோ உதவவில்லை!

1945-ஆம் ஆண்டு முதல் தான் விமானங்கள் இங்கு மறைந்து வருகின்றன என்று நினைக்காதீர்கள். அந்த வருடத்திலிருந்துதான் இந்தச் சம்பவங்கள் உலகின் கவனத்தைக் கவர்ந்தன. அதிலிருந்துதான் மறைந்த விமானங்களைப் பற்றிய பதிவேடுகளும் முறைப்படி தயாரிக்கப்படுகின்றன.

இனி பெர்முடா முக்கோணப் பகுதியிலிருந்து மறைந்த கப்பல்களை பற்றிய விவரங்களைக் காண்போம்.


பெர்முடா முக்கோணம்
அமெரிக்க ஐக்கிய நாடுகள்
அட்லாண்டிக் பெருங்கடல்
௨660 கிமீ
பெர்முடா
1825 கிமீ
போர்ட் லாடர்லெட்
மெக்சிகோ வளைகுடா
மியாமி
பகாமா தீவுகள்
௨775 கிமீ
ஹவானா
கியூபா
ஜமைகா
பூயெர்டோ ரிகோ

# 3. காற்றில் கரைந்த கப்பல்கள்

ஐரோப்பியர்கள் மேற்கு இந்திய நாடுகளுக்குப் பயணம் செய்ய ஆரம்பித்த காலத்திலிருந்தே பெர்முடா முக்கோணத்தைப் பற்றிய மர்மங்கள் வெளியே பரவ ஆரம்பித்தன.

அமெரிக்காவைக் கண்டுபிடித்த கொலம்பஸ் இந்த முக்கோணப் பகுதியில் பயணம் செய்தபோது- கடல் நீர் மிகவும் பிரகாசித்ததாகவும் தீப்பந்து ஒன்று கப்பலைச் சுற்றி வந்த பிறகு கடலினுள் பாய்ந்து மறைந்ததாகவும், கப்பலின் திசைகாட்டிகள் தாறுமாறாகச் சுழன்றதாகவும் கூறியுள்ளார். கொலம்பஸ் மற்றொரு முறை பயணம் செய்தபோது பிரம்மாண்டமான நீர் ஊற்றைப் பார்த்ததாயும் கூறியுள்ளார்.

ஆரம்ப காலங்களில் நீண்ட தூரக் கப்பற் பயணம் என்பது மிகவும் ஆபத்தான விஷயமாக இருந்தது. காற்றையும் - பாய் மரங்களையும் - துடுப்பையும் மட்டுமே நம்பி அக்காலத்தில் கப்பல்கள் சென்று கொண்டிருந்தன. புயற்காற்றினாலும் கடற்கொள்ளையர்களாலும் பல கப்பல்கள் அழிந்ததும் உண்டு.

ஆனால் காலப் போக்கில் கடற்கொள்ளையர்களின் பயம் நீங்கியது. கப்பல்களும் நவீன மயமாக்கப்பட்டன. புயல் வருவதை முன் கூட்டியே அறியக் கூடிய விஞ்ஞான சாதனங்கள் கப்பல்களிலேயே பொருத்தப்பட்டன. காற்றையே நம்பியிராமல் இஞ்ஜின்களின் உந்து விசையால் விரைவாகச் செல்லக் கூடிய வகையில் கப்பல்கள் கட்டப்பட்டன. ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் உடனே தகவல் அளிப்பதற்கான கம்பியில்லாத தந்தி போன்ற ஒலி பரப்பு வசதிகள் கப்பல்களில் பொருத்தப்பட்டன.

## மறைவது நிற்கவில்லை

இவ்வளவு வசதிகள் இருந்தும் கூட பெர்முடா கடல் பகுதியில் இன்றளவும் கப்பல்கள் மாயமாய் மறைந்துதான் வருகின்றன. அந்தக் கப்பல்கள் மறைந்த தினங்களில் காற்று சாதகமாகவும் கடல் அமைதியாகவும் இருந் துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. மறைந்து போன கப்பல்களின் உடைந்த பாகங்களோ அல்லது மனித உடல்களோ கிடைப்பதும் இல்லை.

அன்றிலிருந்து இன்று வரையில் அநேகக் கப்பல்கள் மறைந்தாலும் அதிகாரப்பூர்வமான அறிவிப்புகள் 1800-ஆம் ஆண்டு முதல் தான் வெளியாகின்றன. பெர்முடா முக்கோணப் பகுதியில் மறைந்ததாக அறிவிக்கப்பட்ட சில கப்பல்களின் விவரங்களை மட்டும் இங்கு தர விரும்பு கிறேன்.

## முதல் அறிவிப்பு

1800-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் **Insurgent** என்ற அமெரிக்கப் பயணிகள் கப்பல் 340 பயணிகளுடன்

பெர்முடாக் கடல் பகுதியில் திடீரென்று மறைந்து விட்டது. அதற்கு என்ன ஆபத்து வந்தது என்று யாராலும் அறிய முடியவில்லை.

இதன் பிறகு 1814-ஆம் ஆண்டு அக்டோபர் 9-ஆம் தேதி அமெரிக்காவைச் சேர்ந்த Wasp என்ற கப்பல் 140 பேர்களுடன் இங்கு மாயமாய் மறைந்துவிட்டது.

1824-ஆம் அக்டோபர் 28-ஆம் தேதி ஒயில்டு கேட் **(Wild cat)** என்ற கப்பல் 14 பேர்களுடன் கியூபாவிலிருந்து தாம்ப்ஸன் தீவுக்கு வந்து கொண்டிருந்தபோது மறைந்து விட்டது.

## தேடும் பணி...?

1880-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அட்லாண்டா **(Atalanda)** என்ற கப்பல் 290 பேர்களுடன் பெர்முடா அருகில் மறைந்தது. இது இங்கிலாந்து நாட்டுக் கப்பலாகும். காணாமல் போன இந்தக் கப்பலைத் தேடும் பணியை இங்கிலாந்து பெரிய அளவில் மேற்கொண்டது. ஆனால் அந்தக் கப்பல் மறைந்த மர்மம் இன்று வரையில் நீடிக்கிறது.

1918-ஆம் ஆண்டு மார்ச் 4-ஆம் தேதி சைக்லோப்ஸ் (Cyclops) என்ற கப்பல் வர்ஜீனியா செல்லும் வழியில் 309 கடற்படை வீரர்களுடன் மறைந்தது. அந்தச் சமயம் நடந்து கொண்டிருந்த முதல் உலகப் போரில் இந்தக் கப்பல் தீவிர பங்காற்றியது. சண்டை நேரத்தில் பிற கப்பல்களுக்கு நிலக்கரியைச் சப்ளை செய்யும் பணியிலும் அது ஈடுபட்டது. பிற்காலத்தில்

விமானத்தாங்கிக் கப்பலாக லாங்வே என்ற பெரிய அமெரிக்கச் சண்டைக் கப்பலின் துணையாகவும் நின்று இது போரிட்டது.

## தாக்குதலோ இது...

எனவே ஜெர்மன் நாட்டு நீர்மூழ்கிக் கப்பலால் இது தாக்கப்பட்டு மூழ்கியிருக்கும் என்றுதான் ஆரம்பத்தில் நினைத்தார்கள். ஆனால் ஜெர்மனியர்களின் பதிவேடு களின் படி "சைக்லோப்ஸ்" மறைந்த சமயத்தில் அங்கு எந்த விதமான நீர்மூழ்கிக் கப்பலும் இல்லை என்பது பிறகு தெரிய வந்தது.

ஒரு வேளை பெரிய அலைகள் தோன்றி கப்பலைக் கவிழ்த்திருக்கும் என்று சந்தேகித்தார்கள். ஆனால் அப்போது அந்தப் பகுதியில் இருந்த வேறு எந்தக் கப்பலும் அலைகளால் பாதிக்கப்படாததால் இந்த கருத்தையும் ஏற்காமல் விட்டனர் (இந்தக் கருத்தை மையமாகக் கொண்டு 1973-ஆம் ஆண்டு The Poseidon Adventure என்ற ஆங்கிலத் திரைப்படம் கூட வெளி யாகியது. ஒரு பெரிய கடல் அலையால் பயணிகள் கப்பல் ஒன்று தலை கீழாகக் கவிழ்க்கப்பட்டு அதிலிருந்த பயணிகளில் சிலர் மட்டும் போராடி உயிர் பிழைப்பதே அந்தப் படத்தின் கதையாகும்.) இப்படிப் பலவிதமான காரணங்கள் கூறப்பட்டாலும் அந்தக் கப்பல் மறைந்த தற்கான சரியான விளக்கம் யாராலும் கூற முடியவில்லை.

இதே போன்று மர்மமாக மறைந்த மற்றொரு கப்பலைப் பற்றியும் நீங்கள் அறிந்து கொள்வது அவசியம்.

பிரேசில் நாட்டைச் சேர்ந்த சாவ் பாவ்லோ (Sau Paulo) என்ற சண்டைக் கப்பல் அமெரிக்காவிலுள்ள அஜோர்ஸ் (Azores) துறைமுகத்திலிருந்து இரவு நேரத்தில் புறப் பட்டது. துறைமுகத்தை விட்டு வெளியேறுவதற்கு உதவி செய்யும் இரண்டு நீராவிப் படகுகள் அந்தக் கப்பலை வெளியே இழுத்துச் சென்றன.

## எங்கே! எங்கே!

அவற்றில் ஒரு படகு மட்டும் கப்பலுடனான தனது பிணைப்பிலிருந்து திடீரென்று விடுபட்டது. கப்பலுடன் மீண்டும் தங்களது படகைப் பிணைத்துக் கொள்வதற்காக அந்தப் படகு வந்த வழியிலேயே மீண்டும் துறைமுகம் திரும்பியது.

என்ன ஆச்சரியம்! அங்கு கப்பலையே காண வில்லை. அது மட்டுமல்ல அதை இழுத்து வந்த மற்றொரு நீராவிப் படகையும் காணவில்லை.

1951-ஆம் ஆண்டு அக்டோபர் 4-ஆம் தேதி விடியற்காலையில் இந்தச் சம்பவம் நடைபெற்றது. திடீரென்று சில நொடிகளிலேயே அவ்வளவு பெரிய கப்பல் எப்படி மறைந்தது என்று யாருக்கும் தெரிய வில்லை.

வேறு கிரகங்களிலிருந்து இந்த பூமிக்கு பறக்கும் தட்டுகளில் வந்து போகும் சில உயிரினங்கள் இந்த உலகத்திலுள்ள பொருள்களையும் மனிதர்களையும் தங்கள் உலகத்திற்குக் கைப்பற்றிச் சென்றிருக்கலாம் என்று சிலர் கருதுகிறார்கள்.

## மர்ம ஒளி தோன்றியது

"சாவ் பாவ்லோ" கப்பல் மறைந்த சமயம் அந்தப் பகுதியில் விசித்திரமான வெளிச்சங்கள் தோன்றி மறைந்தன என்று அப்போது பறந்து கொண்டிருந்த விமானிகள் சிலர் புலன் விசாரணையின் போது கூறினார்கள். ஆனால் உருப்படியான காரணத்தை யாரும் கூறவே இல்லை.

இதுவரையில் நீங்கள் படித்து வந்த செய்திகள் அனைத்தும் இராணுவக் கப்பல்களைப் பற்றியதாகும். இவற்றைத் தவிர அநேக வர்த்தகக் கப்பல்களும் இங்கு மறைந்துள்ளன. அவற்றைப் பற்றியும் காண்போம்.

1840-ஆம் ஆண்டு ரோசாலி (Rosalie) என்ற பிரெஞ்சுக் கப்பல் ஒன்று ஹவானாவை நோக்கி வந்து கொண்டிருந்தது. மற்றவற்றைப் போல இந்தக் கப்பல் மாயமாய் மறையவில்லை. ஆனால் அதில் இருந்த அனைத்து மனிதர்களும் மாயமாய் மறைந்துவிட்டனர்.

அந்தக் கப்பலில் ஏற்றப்பட்டிருந்த சரக்குகளும் பயணிகளின் உடைமைகளும் அப்படியே பத்திரமாக இருந்தன. ஆனால் மனிதர்களை மட்டும் காணவில்லை.

திடீரென்று ஏதேனும் கொள்ளை நோய் வந்து அவர்கள் அனைவரும் இறந்து விட்டார்களா? உதவி கேட்பதற்கும் கூட வழியில்லாமல் அனைவரும் இப்படி இறந்து விட்டிருந்தால் அவர்களது பிணங்களாவது அங்கே இருக்க வேண்டுமல்லவா?

அவை எங்கே?

கடற் கொள்ளையர்கள் தாக்கி இவர்களைச் சிறைப் பிடித்திருப்பார்களா! கொள்ளையர்கள் நோக்கமே பணமும் பொருளும்தான், மனிதர்கள் அல்ல. அப்படியே இருந்தாலும் எந்தக் கொள்ளையராவது பொருள் களை விட்டுவிட்டு மனிதர்களை மட்டும் கைப்பற்றிச் செல்வார்களா?

## மீண்டும் ஒரு கப்பல்

26-2-1855 அன்று செஸ்டர் (Chester) என்ற கப்பலும் இதே போன்ற நிலையில் காணப்பட்டது. தன்னிச்சைப் படி மிதந்து கொண்டிருந்த அந்தக் கப்பலிலும் ஒரு மனிதர் கூட இல்லை. ஆனால் அதிலிருந்த நாற்காலிகள் மேஜைகள் மட்டும் கண்டபடி நகர்த்தப்பட்டு உருண்டும் உடைந்தும் காணப்பட்டன. கப்பலில் இருந்த உயிர் காப்புப் படகுகள் (Life Boats) அந்தந்த இடங்களி லேயே பத்திரமாக இருந்தன. ஆனால் ஒரு மனிதரைக் கூட காணவில்லை!

இதையடுத்து 1881-ஆம் ஆண்டு அமெரிக்காவைச் சேர்ந்த எல்லன் ஆஸ்டின் (Ellen Austin) என்ற பாய்மரக் கப்பல் தன்னிச்சையாக மிதந்து கொண்டிருந்ததைக் கண்டு பிடித்தார்கள். அதன் பாய்கள் அழகாகச் சுருட்டப் பட்டிருந்தன. கப்பலில் எந்த விதமான சேதமும் இல்லை. நன்றாக இருந்தது. ஆனால் ஒரு ஈ-காக்கை கூட அதில் இல்லை.

மேற்கு அஜோர்ஸ் அருகில் சில தினங்களுக்கு முன்பு ஏற்பட்ட பலத்த காற்றில் அந்தக் கப்பல் சிக்கி இருக்கலாம் என்று கருதப்பட்டது ஆனாலும் ஒருவர் கூடவா அந்தப் புயலில் உயிர் பிழைக்கவில்லை? அனைவரும் புயலால் தாக்கப்பட்டு இறந்திருந்தால் கப்பல் மட்டும் சேதமில்லாமல் இருப்பது எப்படி?

## காலண்டர் கணக்கு

இதே போன்று ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த ஃப்ரியா (Freya) என்ற கப்பல் கியூபா அருகில் ஆட்கள் யாரு மில்லாத நிலையில் 1902-ஆம் ஆண்டின் இறுதியில் கண்டுபிடிக்கப்பட்டது. கப்பலில் இருந்த தினசரி காலண்டரில் அக்டோபர் 4-ஆம் தேதி வரை கிழிக்கப் பட்டிருந்தன. அன்றைய தினம் தான் கப்பலின் மாலுமி களுக்கு ஏதோ நடந்திருக்க வேண்டும்.

அது என்ன?

அஜோர்ஸிலிருந்து வடக்குத் திசையில் மிதந்து கொண்டிருந்த மேரி செலஸ்டி (Mary Celeste) என்ற கப்பலை 1872-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் டி கிராஷியா (Die Gratia) என்ற பிரிட்டிஷ் கப்பல் கண்டு பிடித்தது. ஆனால் மேரி செலஸ்டியிலும் ஒரு மனிதர் கூட இல்லை. கப்பலில் தண்ணீரும் உணவுப் பொருள்களும் தேவைக்கு அதிகமாகவே சேகரிக்கப்பட்டிருந்தன. ஆனால் அதிலிருந்த பத்து பேர்களும் குறிப்பாக கேப்டன் அவரது மனைவி இவர்களது பெண் குழந்தை உள்பட யாரையுமே காணவில்லை. அதே சமயம் கப்பலில் யாரோ

தாக்குதல் நடத்தியதைப் போன்ற அறிகுறிகள் காணப் பட்டன.

## இதுவும் மர்மமே

கப்பல்கள் மறைவதாக முன்பு எழுதி விட்டு இப்போது ஊழியர்கள மட்டும் மறைவதாக எழுதுகிறேனே என்று சிந்திக்கிறீர்களா! பெர்முடாக் கடல் பயணத்தில் இந்த இரண்டு விதமான சம்பவங்களுமே நிகழ்கின்றன என்பதால் இரண்டையும் குறிப்பிட்டேன். கப்பல்கள் மறைவதைப் போல கப்பல்களில் உள்ள மனிதர்கள் மட்டும் மறைவதும் கூட ஆச்சரியம் தானே? தொடர்ந்து படியுங்கள்.

1921-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கரோல் டீரிங் **(Carol Deering)** என்ற கப்பல் வடக்கு கரோலினா அருகில் கண்டுபிடிக்கப்பட்டது. அதிலும் ஒரு மனிதர் கூட இல்லை.

1937-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஜான் அண்டு மேரி **(John & Mary)** கப்பல் பெர்முடாவிலிருந்து தெற்காக ஐம்பது மைல் தொலைவில் ஆட்கள் யாருமில்லாத நிலையில் காணப்பட்டது.

இதே போல் 1940-ஆம் ஆண்டு பிப்ரவரி 3-ஆம் தேதி க்ளோரியா கொலைட் **(Gloria Colite)** என்ற கப்பலும், 1944-ஆம் ஆண்டு அக்டோபர் 22-ஆம் தேதி ரூபிகான் **(Rubicon)** என்ற கப்பலும் யாருமில்லாத அனாதைகளாக கண்டுபிடிக்கப்பட்டன ஆனால் ரூபிகான் கப்பலில் மட்டும் யாரோ வளர்த்த நாய் ஒன்று பல நாள் பட்டினி

யுடன் காணப்பட்டது, செப்டம்பர் 26-ஆம் தேதியன்று ஹவானா துறைமுகத்திலிருந்து அந்தக் கப்பல் புறப் பட்டதாக தஸ்தாவேஜுகள் தெரிவித்தன. கப்பலில் இருந்த உயிர்காப்புப் படகுகள் அனைத்தும் காணப் படாததால் அதிலிருந்தவர்கள் ஏதோ அபாயத்திலிருந்து தப்பிச் செல்வதற்கு அதை உபயோகித்திருக்கலாம் என்று ஊகித்தனர்.

ஆனால் அப்படித் தப்பித்துச் சென்றவர்கள் இன்று வரையில் தங்கள் வீடுகளுக்கும் வந்து சேரவில்லையே ஏன்? அப்படியானால் எங்கே போவார்கள்?

பெரிய கப்பல்களைப்போல சிறிய படகுக்ளில் இருந்தும் கூட மக்கள் மறைந்து விட்ட சம்பவங்கள் ஏராளம் உண்டு.

1955-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பெர்முடாவி லிருந்து தென்மேற்காக 400 மைல் தூரத்தில் கன்னி மாரா. IV என்ற பாய்மரப் படகு ஒன்று கண்டுபிடிக்கப் பட்டது. அதிலும் பயணிகள் எவரும் இல்லை.

1969-ஆம் ஆண்டு ஜூன் 30-ஆம் நாள் மேப்பிள் பாங்க் (Maple Bank) என்ற படகு பெர்முடாவின் வடக்குப் பகுதியில் ஆளில்லாத நிலையில் காணப்பட்டது.

1969- ஜூலை 6-ஆம் நாள் தி வோகா பாண்ட் (The Voga Bond) என்ற 12 மீட்டர் நீள படகு ஒன்று நிராதரவாகக் கண்டுபிடிக்கப்பட்டது.

## மறைந்த கப்பல்

மனிதர்கள் மறைந்தது இத்துடன் நிற்கட்டும். கப்பல் ஒன்று விசித்திரமாக தனது பயணிகளுடன் மறைந்த சம்பவம் ஒன்றைக் காண்போம்.

அமெரிக்காவின் மியாமி துறைமுகத்தில் 1967-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அந்த மினி கப்பல் நின்றிருந்தது. அந்தக் கப்பலின் பெயர் விட்ச் கிராப்ட் (Witch Craft) என்பதாகும். அதன் உரிமையாளரான டான் பராக் (Dan Burrack) என்பவர் கடலிலிருந்து நகரத்தின் கிறிஸ்துமஸ் விளக்குகளைக் காண்பதற்காக பாட் ஹோகன் (Father ptt Hogen) என்ற பாதிரியாரைச் சிறப்பு விருந்தினராகத் தனது கப்பலுக்கு அழைத்து வந்திருந்தார்.

## அவசரச் செய்தி

துறைமுகத்திலிருந்து சரியாக ஒரு மைல் தூரம் வரை கடலில் பயணம் செய்து நங்கூரமிட்டு கப்பலை நிறுத்தினார்கள். இங்கிருந்து பார்த்தால் நகரமே அற்புதமாக ஜொலிக்கிறது என்று அவர்கள் ரேடியோச் செய்தி அனுப்பினார்கள்.

சற்று நேரம் கழித்து உரிமையாளர்கள் டான்பராக் அவசர உதவி கேட்டுக் கரைக்குச் செய்தியனுப்பினார். கப்பல் அப்போது நிற்குமிடத்தையும் துல்லியமாக அந்தச் செய்தியில் குறிப்பிட்டார் அவர்.

அடுத்த பதினைந்தாம் நிமிடத்திலேயே கடற் கரைக் காவல் படையைச் சேர்ந்த படகு ஒன்று அந்த

இடத்தை அடைந்துவிட்டது. ஆனால் விட்ச் கிராப்ட் என்ற அந்தச் சிறிய கப்பல் நின்றிருந்த அடையாளமே அங்கு இல்லை. சுற்றுப்புரத்தில் கப்பல் ஒன்று நிற்பதாகவும் ரேடாரில் பதிவாகவில்லை. இந்தக் கப்பலை விரிவாகத் தேடும் முயற்சிகளும் தோல்வியடைந்தன. அந்தக் கப்பலுக்கு எப்படிப்பட்ட ஆபத்து வந்தது என்று இன்று வரை தெரியவில்லை.

## ஈட்டிபோல் ஆபத்து

இதே போன்று அவசரச் செய்தி அனுப்பிவிட்டு மறைந்து போன கப்பல் மற்றொன்றும் உள்ளது.

பஹாமாஸுக்கும் கியூபாவுக்கும் இடையில் ராய்ஃபுக்கு மாரு (Raifuku Maru) என்ற ஜப்பானிய கப்பல் பயணித்துக் கொண்டிருந்த போது அதனிடமிருந்து அவசரச் செய்தி ஒன்று வந்தது.

"உதவி... உதவி... ஆபத்து ஈட்டிபோல வருகிறது சீக்கிரம் வாருங்கள்..."

"எங்களால் தப்பிக்க முடியாது... உதவி... உதவிக் குழுவினர் சென்றபோது அங்கே அந்தக் கப்பலும் மறைந்து விட்டிருந்தது. ஈட்டி போன்ற ஆபத்து என்றால் என்ன? அது புயலா? அல்லது மின்னல் போன்ற தாக்குதலா? யாருக்கும் ஒன்றும் புரியவில்லை.

## நீர் மூழ்கி மூழ்கியது

அமெரிக்காவின் சக்தி வாய்ந்த அனுசக்தி நீர் மூழ்கிக் கப்பல் ஒன்று கூட இங்கு மறைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

அமெரிக்கக் கடற்படையைச் சேர்ந்த ஸகார்பியன் **(Scorpion)** என்ற அணு சக்தி நீர் மூழ்கி ஒன்று 91 வீரர்களுடன் வழக்கமான பணியில் ஈடுபட்டு வந்தது.

1968-ஆம் ஆண்டு மே மாதம் 21-ஆம் தேதி அஜோர்ஸிலிருந்து மேற்கில் 250 மைல் தூரத்திலிருந்து அந்தக் கப்பல் தனது பணியைப் பற்றிய ரேடியோ அறிக்கையை கரைக்கு அனுப்பியது.

ஆனால் ஒரு வாரம் கழித்து அதாவது மே மாதம் 29-ஆம் தேதியிலிருந்து அதனுடைய ரேடியோத் தொடர்பு அறுந்துவிட்டது. அந்த நீர் மூழ்கிக் கப்பலைத் தேடும் பணிகள் தோல்வியடைந்ததால் அது காணாமல் போனதாக 1968-ஆம் ஆண்டு ஜூன் 5-ஆம் தேதி அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

## கடலுள் கிடைத்தது

சில மாதங்கள் கழித்து ஆய்வுக் கப்பல் ஒன்று அஜோர்ஸிலிருந்து 60 மைல் தள்ளி கடலுக்குள் பத்தாயிரம் அடிகளுக்கும் மேற்பட்ட ஆழத்தில் ஏதோ ஒன்று உடைந்து கிடைப்பதைக் கண்டுபிடித்தது. மேலும் ஆராய்ச்சி செய்ததில் அது காணாமல் போளஸ்கார்ப்பியன் என்ற நீர் மூழ்கிக் கப்பல் தான் என்பது தெளிவாகியது.

அப்படியானால் பெர்முடா முக்கோணத்தின் அதிசய சக்தியினால் இந்தக் கப்பல் மறையவில்லை; ஏதோ விபத்தின் காரணமாக மூழ்கிவிட்டது. மாயமாவது மந்திரமாவது என்று பலர் பேசினார்கள்.

## பதில் இல்லையே ஏன்?

ஆனால் அதி நவீன இயந்திர வசதிகளைக் கொண்ட அந்த அணுசக்தி நீர் மூழ்கிக் கப்பல் பெர்முடா முக்கோணத்திற்குள் வந்தவுடன் நொறுங்கி மூழ்கக் காரணம் என்ன?

91 வீரர்கள் ஒருவர் கூட உயிர்த் தப்பவில்லையே ஏன்?

அபாய அறிவிப்புக் கூடத் தர முடியாமல் அப்படி என்ன திடீர் கோளாறு அந்தக் கப்பலுக்கு வந்து விட்டது?

இந்தக் கேள்விகளுக்கு இன்று வரை யாரும் பதில் தரவில்லை.

இப்படிப் பெரிய கப்பல்கள் மட்டுமல்ல. சிறிய படகுகள் கூட நூற்றுக்கணக்கில் இங்கு மறைந்துள்ளன.

## நஷ்ட ஈடு

1973-ஆம் ஆண்டு கூட ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த அனிடா (Anita) என்ற கப்பல் இங்கு மறைந்துவிட்டது. அந்தக் கப்பலை இன்ஷியூர் செய்திருந்த லண்டன் கம்பெனி ஒன்று துப்பறியும் நிபுணர்களை பெர்முடாவிற்கு அனுப்பி கப்பல் மறைந்த விதத்தை ஆராயச் சொன்னது. ஆனால் அந்தத் துப்பறியும் சிங்கங்களால் காரணம் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இதற்குள் கப்பல் உரிமையாளர் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்ததால் அந்த

இன்ஷியூர் கம்பெனி மூக்கால் அழுது கொண்டே முப்பது லட்சம் டாலர்களை நஷ்ட ஈடாக அளித்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த பெர்முடா முக்கோணத்தின் அதிசய சக்தியின் தாக்குதலுக்கு ஆளாகி மறையாமல் தப்பித்தவர் களும், இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் தங்கள் அனுபவங்களை ஆராய்ச்சியாளர்களிடம் கூறியுள் ளார்கள். அவற்றைஅடுத்த பகுதியில் காண்போம்.

# 4. உயிர்தப்பியவர்களின் உண்மை அனுபவங்கள்

**வி**ன்ஸன்ட் க்ராடிஸ் (Vincent Graddis) என்ற ஆராய்ச்சியாளர் INVISIBLE HORIZONS என்ற நூலில் ஒரு விமானியின் கடிதத்தை வெளியிட்டுள்ளார்.

டிக் ஸ்டார்ன் (Dick Starn) என்ற விமானி கட்டிஸுக்கு எழுதிய அந்தக் கடிதம் வருமாறு;

“நான் 1944-ஆம் ஆண்டு இறுதியில் ஒரு சண்டை விமானத்தை ஓட்டிக் கொண்டு இத்தாலிக்குப் பயண மானேன். எனது குழுவில் ஏழு விமானங்கள் வந்தன. பெர்முடாவிலிருந்து சுமார் 300 மைல் தொலைவில் இருந்த போது எங்களது விமானங்கள் எதிர்பாராத ஒரு வித அதிர்ச்சிக்குள்ளாயின. மேற்கொண்டு பறந்து செல்ல முடியாமல் எனது விமானத்தை வந்த வழியே திருப்பி விட்டேன்.

**இரண்டு தான் வந்தன.**

இது நிகழ்ந்தபோது வானிலை நன்றாக இருந்தது. ஆனால் அந்த அதிர்ச்சியினால் விமானம் தலை கீழாகவும்

செங்குத்தாகவும் கீழ் நோக்கிப் பாயத் தொடங்கி விட்டது. ஒரு சமயம் கடலுக்குள்ளேயே விமானம் பாய்ந்து விடக் கூடிய அளவு உயரம் குறைந்து விட்டது. நான் மிகவும் சிரமத்துடன் விமானத்தின் இயக்கங்களைக் கட்டுப் படுத்தி தளத்திற்குக் கொண்டு வந்து சேர்த்தேன்.

என்னுடன் மற்றொரு விமானமும் வந்து இறங்கி விட்டது. ஆனால் மற்ற ஐந்து விமானங்களின் கதி என்ன என்று தெரியவில்லை. அவற்றுடன் ரேடியோத் தொடர்பும் கிடைக்கவில்லை. காணாமல் போன அந்த விமானங்கள் இன்று வரையில் கண்டு பிடிக்கப்படவில்லை"

Flight-19 காணாமல் போவதற்கு ஒரு வருடம் முன்பு இந்தச் சம்பவம் உலகப் போர் சமயத்தில் நிகழ்ந்ததால் சர்வ சாதாரணமாக இது எடுத்துக் கொள்ளப்பட்டது. இதற்கு அவ்வளவு முக்கியத்துவம் தரப்படவில்லை என்று வின்ஸன்ட் க்ராடிஸ் தனது நூலில் குறிப்பிடுகிறார்.

## அதே அனுபவம்

இந்தப் புத்தகம் வெளியான சில ஆண்டுகள் கழித்து ஒரு நாள் அந்த விமானியும் அவரது மனைவியும் பெர்முடாவிலிருந்து நாஸாவு என்ற இடத்திற்கு பகல் வேளையில் பயணிகள் விமானம் ஒன்றில் சென்றார்கள். அந்த விமானமும் அப்போது எதிர்பாராத அதிர்ச்சிக் குள்ளாகி தனது உயரத்தை இழக்கத் தொடங்கியது.

அப்போது பயணிகள் சாப்பிட்டுக் கொண் டிருந்தனர். அவர்களது மடியிலிருந்த உணவுப் பொருள் களும் தட்டுகளும் விமானத்தின் கூரையில் பட்டுத்

தெறித்தன. விமானம் மேலும் கீழும் ஏறி இறங்கியபடி பறந்தது. அந்த முறையும் அந்த விமானி தப்பித்துக் கொண்டார்.

ஆகாயத்தில் காற்றில்லாத வெற்றிடம் வரும்போது பறக்கும் விமானங்கள் தள்ளாடுவது வழக்கம் தான். இதை ஆங்கிலத்தில் **Cat** என்பார்கள். அதாவது **Clear air turbulence** என்பதன் சுருக்கமே இது. ஆனால் பெர்முடா முக்கோணத்தில் ஏற்படும் அதிர்ச்சி அப்படிப் பட்டதல்ல என்று தப்பிப் பிழைத்தவர்கள் கூறுகிறார்கள்.

## கடல் இழுத்தது

இனி மீன் பிடிப்படகுக்காரர் ஒருவரின் அனுபவத்தைக் காண்போம். **Wild Goose** என்னும் மீன் பிடிக்கும் கேப்டன் ஜோ டால்லி **(Joe Talley)** யின் அனுபவம் சற்று வித்தியாசமானது.

ஒரு சமயம் பழுதடைந்துவிட்ட இவரது படகைக் கட்டி இழுத்துக் கொண்டு மற்றொரு படகு சென்று கொண்டிருந்தது. பெர்முடா முக்கோணத்திற்குட்பட்ட பகுதிக்குள் வந்தபோது வானிலை தெளிவாக இருந்தது. தென்மேற்கிலிருந்து மிதமான வேகத்தில் காற்று வீசிக் கொண்டிருந்தது. அமைதியான இரவு நேரம்.

கேப்டன் டால்லி தனது 65 அடி நீளமுள்ள படகில் கீழ் தளத்திலிருந்த அறையில் தூங்கிக் கொண்டிருந்தார். திடீரென்று தன்மீது கடல்நீர் பாய்வதை அறிந்து திடுக்கிட்டு எழுந்தார் தன்னையறியாமலே உயிர்க்காக்கும் வளையத்தைப் பிடித்துக் கொண்டு ஜன்னல் வழியாக

வெளியே பாய்ந்தார் வெளியே வந்த பிறகு தான் அபாயத்தின் நிலை அவருக்குப் புரிந்தது. அவரது படகு முழுமையாகக் கடலுக்குள் மூழ்கி விட்டிருந்தது. தண்ணீருக்குள்ளிருந்து எப்படியோ போராடி நீந்தி மேல் மட்டத்திற்கு வந்தார்.

## விட்டுச் சென்றது ஏன்?

கடல் மட்டத்திற்கு வந்து பார்த்தபோது தனது படகை இழுத்து வந்த Caicos Trader என்ற 104 அடி நீளமுள்ள படகைக் காணாமல் திகைத்துப் போனார். தண்ணீரில் தத்தளித்துக் கொண்டிருந்த அவரை அந்தப் படகே வந்து காப்பாற்றியும் விட்டது.

நடந்தது என்னவென்றால்:-இரண்டு படகுகளும் அமைதியாகச் சென்று கொண்டிருந்தபோது கேப்டன் டால்லியின் படகு மட்டும் திடீரென்று ஏதோ ஒரு விசையால் கவர்ந்து கடலுக்குள் இழுக்கப்பட்டது. அதனுடன் பிணைக்கப்பட்டிருந்த கயிற்றின் விசையால் இழுத்துச் சென்ற படகும் கூட மூழ்கும் அபாயம் ஏற்பட்டது. இதனால் இரண்டு படகுகளையும் பிணைத் திருந்த கயிற்றைத் துண்டித்து விட்டுச் சென்றனர். பிறகு கேப்டன் டால்லியைத் தேடும் நோக்கத்துடன் திரும்பி வந்து அவரைக் காப்பாற்றி விட்டனர்.

Wild Goose என்ற பட்கை கடலுக்குள் இழுத்துச் சென்ற மர்மச் சக்தி எதுவென்று யாருக்கும் தெரியவில்லை.

இதே போன்று பிணைக்கப்பட்டுச் சென்று கொண்டிருந்த இரண்டு கப்பல்கள் மற்றொரு விதமாகப் பாதிக்கப்பட்டன.

## கட்டி இழுக்கும் வேலை

கேப்டன் டான் ஹென்ரி என்பவருக்கு 1966-ஆம் ஆண்டு ஏற்பட்ட பயங்கர அனுபவம் இது. இவர் Sea Phantham Exploration Company என்ற கம்பெனியின் உரிமையாளர். நடுக்கடலில் பழுதடைந்து நின்று விடும் கப்பல்களைக் கட்டி இழுத்து வருவதும் பழுது நீக்கித் தருவதும் இக்கம்பெனியின் வேலையாகும். 55 வயதான இவர் பல வருட கடற்பயண அனுபவம் வாய்ந்தவர். பெர்முடாக் கடலில் ஏற்பட்ட பயங்கர அனுபவத்தை அவரே கூறுகிறார்.

"அன்றைய தினம் பெட்ரோலியம் நைட்ரேட் ஏற்றிச் சென்றிருந்த கப்பல் ஒன்றை திருப்பி இழுத்துக் கொண்டு வந்திருந்தோம். எங்களது கப்பலின் பெயர் Good News என்பதாகும். இது 160 அடி நீளமும் இரண்டாயிரம் குதிரைச் சக்திகளையும் கொண்டது. கட்டி இழுக்கப்பட்டிருந்த கப்பல் 2500 டன் எடை கொண்டது. இது ஆயிரம் அடி நீள இணைப்புச் சங்கிலியால் கட்டி இழுக்கப்பட்டு வந்தது. (சென்ற சம்பவத்தில் கூறப்பட்ட கேப்டன் டால்லியின் படகு மூழ்கிய அ்தே இடத்திற்கு இவர்களது கப்பல் வந்தது) அந்த இடத்தில் கடலின் ஆழம் 3600 அடி (600 Fathoms).

## என்னவென்று புரியவில்லை

பிற்பகல் நேரம், வானிலை நன்றாக இருந்தது. வானம் தெளிவாக இருந்தது. கேபினுக்குள் ஒரு வேலையாகச் சென்று சில நிமிடங்கள் அங்கேயே

இருந்தேன். அப்போது ஒரு பெரிய சத்தம் கேட்டது. வெளியே வந்து அங்கே என்ன நடக்கிறது என்று கத்தினேன்.

முதல் முதலில் நான் பார்த்தது கப்பலின் திசை காட்டியை (Compass). அதன் முள் கண்டபடி சுற்றி வந்து கொண்டிருந்தது. எப்போதும் அதன் முள் வடக்கு தெற்காகத்தான் காட்டும், சுற்றாது. இப்படி நிகழ்வதற்குக் காரணமே இல்லை.

கடல் நீர் எல்லாப் பக்கத்திலிருந்தும் வாரி இறைத்துக் கொண்டிருந்தது. நீர்-வானம் எல்லாம் ஒன்றாகத் தோன்றியது. நாங்கள் எங்கே இருக்கிறோம் என்றே புரியவில்லை.

## கருவிகள் இயங்கவில்லை

எங்கள் கப்பலின் ஜெனரேட்டர்கள் அனைத்தும் பழுதடைந்து விட்டன. எல்லாவிதமான மின்சாரக் கருவிகளும் இயங்க மறுத்தன. அவசரக்கால ஜெனரேட்டர்களை இயக்குவதற்குச் செய்த முயற்சிகளும் பலனளிக்கவில்லை.

“அப்போது இரண்டு கப்பல்களையும் இணைத்துள்ள சங்கிலியைப் பற்றிய கவலை எனக்கு ஏற்பட்டது. சங்கிலி உறுதியாக இருந்தாலும் என்னால் அப்போது அதைப் பார்க்க முடியவில்லை. ஏதோ ஒரு மேக மூட்டம் அதை மறைத்துக் கொண்டிருந்தது. கடல் அலைகளும் ஆக்ரோஷமாகக் கப்பலைத் தாக்கிக் கொண்டிருந்தன.

இதனால் பயந்துபோன நான் கப்பலில் இருந்த எல்லா விசைகளையும் உடனே முடுக்கி விட்டேன். நாங்கள் எங்கே செல்கிறோம் என்றே புரியவில்லை. எப்படியாவது அந்த நரகத்திலிருந்து தப்பிவிட வேண்டும் என்ற ஒரே சிந்தனைதான் அப்போது எனக்கு இருந்தது. ஏதோ ஒரு சக்தி எங்களை இழுக்கிறது என்பதும்-அது தனது முயற்சியில் முழுவெற்றியை அடைய முடியவில்லை என்பதும் எனக்குப் புரிந்தது.

## கப்பலைக் காணோம்.

ஒரு வழியாக மிகுந்த சிரமத்துடன் எங்களது கப்பல் அந்தப் பனிமூட்டத்திலிருந்து வெளியேறியவுடன் பின்னால் வந்த கப்பலைப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! அந்தக் கப்பலையே காணவில்லை. ஆனால் எங்களது இரண்டு கப்பல்களையும் இணைத்திருந்த சங்கிலி மட்டும் விரைப்பாக நின்றிருந்தது. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உடனே ஓடிச்சென்று சங்கிலியை இழுக்கத் தொடங்கினேன்.

மீண்டும் ஓர் ஆச்சரியம்!

அந்த பனிமூட்டத்திலிருந்து எங்களது பிணைப்புக் கப்பல் சிறிது சிறிதாக வெளியே வந்தது. அடுத்த நிமிடம் அங்கு ஒரு மாறுதல் நிகழ்ந்தது. திடீரென்று அந்த மாபெரும் பனிமூட்டம் மறைய ஆரம்பித்தது. சற்று நேரத்திற்கெல்லாம் அந்த இடம் மிகவும் தெளிவாகி வழக்கம் போலாகியது. கிட்டத்தட்ட என்னால் பதினொரு மைல் வரையில் கடலில் தெளிவாகப் பார்க்க முடிந்தது.

பலசாலிகளான இருவர் சேர்ந்து நமது கைகளைப் பற்றிக் கொண்டு இரண்டு பக்கமும் இழுத்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது எங்களது நிலைமை. எனவே கடல் தெளிவான பிறகு கூட அங்கே என்னதான் நடந்தது என்பதை ஆராய்ந்து பார்ப்பதற்கு எனக்குத் துணிவு வரவில்லை" என்றார் அவர்.

## மர்ம ஒளி

பஹாமாவில் உள்ள பல்வேறு சிறிய தீவுகளுக் கிடையில் பயணிகள் போக்குவரத்து படகு சர்வீஸ் நடத்துகிறார் ஜிம் ரிச்சர்ட்சன் (Jim Richardson) என்பவர். இவர் ஒரு முன்னாள் கடற்படை விமானி. பெர்முடா பகுதியில் விமானங்களை ஓட்டிச் சென்றபோது விமானத்தின் கருவிகள் தாறுமாறாகச் செயல்பட்டதை இவரும் உறுதி செய்கிறார். அது மட்டுமல்ல ஆண்டிரோஸ் அருகிலிருக்கும் மோசல்லி (Moselle) என்ற குன்றின்மேல் இரவில் பளிச்சென்ற ஒளிகள் தோன்றுகின்றன. இது பிசாசுகளின் வேலை என்று அந்தப் பகுதியில் வாழும் மீனவர்கள் கூறுவார்கள் இந்த வெளிச்சத்தை பல விமானிகள் கவனித்துள்ளார்கள் என்கிறார் ஜிம் ரிச்சர்ட் சன்.

## முன் அலைத் தாக்குதல்

சக் வாக்கலே (Chuk Wakeley) என்ற விமானியின் அனுபவத்தை இனி காணலாம். லாடர்டேல் என்ற இடத்திற்கு விமானத்தில் பயணம் செய்து கொண்டிருந்த போது சிறிது நேரம் விவரிக்க முடியாத ஒரு மின்

அலைகளின் தாக்குதலுக்கு இவர் உள்ளானார். முப்பது வயதான இவர் விமானம் ஓட்டுவதில் நல்ல தேர்ச்சி பெற்றவர் இதில் ஒரு சுவையான விஷயம் என்ன வென்றால் அந்தக் குறிப்பிட்ட சம்பவம் நிகழும் வரையில் இவருக்கு பெர்முடா முக்கோணத்தின் மர்மத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்பதுதான். இதோ அவரது அனுபவம்:-

“சன்லைன் ஏவியேஷன் என்ற விமானக் கம்பெனியில் நான் விமானியாகப் பணியாற்றிய சமயம் 1964-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஒரு நாள் இரவு நஸ்ஸாவு என்ற இடத்தில் பயணிகளை இறக்கிவிட்டு நான் மட்டும் தனியாகப் பறந்து வந்து கொண்டிருந்தேன்.

வானிலை நன்றாக இருந்தது. நட்சத்திரங்கள் மினு மினுத்தன. இரவு சுமார் 9-30 மணி இருக்கும் ஆண்டி ரோஸ் தீவின் மேலே விமானம் பறந்து கொண்டிருந்தது. கீழே குடியிருப்புகளின் விளக்கு வெளிச்சத்தை என்னால் நன்கு காண முடிந்தது. சுமார் எட்டாயிரம் அடி உயரத்தில் விமானம் தானாகப் பறக்கும்படி (Automatic Control) செய்து விட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது தான் அது நிகழ்ந்தது.

## பிரகாசமான ஒளி

விமானத்தின் இறக்கைகளில் ஒரு விதமான வெளிச்சம் திடீரென்று பரவ ஆரம்பித்தது. ஒருவேளை விமானத்தினுள் எரிந்த பல்புகளின் ஒளி ஜன்னல் வழியாகப் பாய்ந்து இப்படி ஒரு பிரமையைத் தோற்று

விக்கிறது என்று தான் முதலில் நினைத்தேன். ஆனால் அந்த எண்ணம் தவறு என்பது உடனே புரிந்தது.

அடுத்த ஐந்து நிமிடங்களிலேயே அந்த ஒளியின் அளவு பெருகியது. விமானத்தின் கருவிகளையே என்னால் காண இயலாதபடி கண்கள் கூசின. திசை காட்டியின் முள் மாறி மாறிக் காட்டியது. விமானம் புறப்பட்டபோது பெட்ரோல் அளவு அரை டாங்க் என்று காட்டிய கருவி இப்போது Full என்று காட்டியது.

விமானம் தானாக நேராகப் பறக்க வேண்டும் என்று நான் அமைத்திருந்த கருவி திடீரென்று விமானத்தை வலது பக்கமாகத் திருப்பி ஓட்ட ஆரம்பித்து விட்டது. இதனால் வேறு வழியில்லாமல் விமானத்தை நானே ஓட்ட ஆரம்பித்தேன்.

## கருவிகள் பழிவாங்கின

விமானத்திற்குள் இருந்த கருவிகளை நம்பி அப்போது என்னால் ஓட்ட முடியவில்லை. ஏனென்றால் அவற்றில் சில பழுதடைந்திருந்தன. மற்றும் சில த்தாறு மாறாக இயங்கிக் கொண்டிருந்தன.

விரைவிலேயே அந்த விமானம் முழுவதும் ஒளிப்பிழம்பாக ஜ்வலிக்க ஆரம்பித்தது. ஜன்னல் வழியாக இறக்கைகளைப் பார்த்தபோது நீலமும்-பச்சையும் கலந்த வண்ணத்தில் அது பிரகாசித்துக் கொண்டிருந்தது. அது மட்டுமல்லாமல் ஒரே தூசியும் தும்புமாகவும் அது காணப்பட்டது.

கருவிகளை நம்ப முடியாததால் விமானத்தை எந்தத் திசையில் ஓட்டுகிறோம் என்பதே புரியவில்லை. நட்சத்திரங்களைப் பார்த்ததும் அனுமானிக்க இயல வில்லை. காரணம் விமானத்தின் பிரகாச ஒளியினால் நட்சத்திரங்களே என் கண்களுக்குப் புலப்படவில்லை.

## அனைத்தும் அடங்கின

விமானம் எங்கேடாவது கெட்டு போகட்டும் என்று நான் விட்டு விட்டேன். அந்த நிலைமையில் என்னால் செய்ய முடிந்தது அது ஒன்றுதான். இதன் பிறகு சுமார் ஐந்து நிமிடம் கழித்து வெளிச்சம் அடங்கத் தொடங்கியது.

உடனே விமானத்தின் எல்லாக் கருவிகளும் சரியாகி வழக்கம் போல் இயங்க ஆரம்பித்தன. விமானத்திற்கு ஏதாவது பாதிப்பு ஏற்பட்டுள்ளதா என்று சோதித்துப் பார்த்தேன், எதுவுமில்லை. பெட்ரோல் அளவு மீட்டரும் பாதியளவைக் காட்டியது. திசைக் காட்டியும் துல்லியமாக வடக்குத் திசையைக் காட்டியது.

தானாகப் பறக்கச் செய்யும் அமைப்பைச் சோதித் தேன். அதுவும் சரியாகவே இருந்தது. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. சற்று முன்பு ஏன் அப்படி நிகழ்ந்தது என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. விமானத்தைத் தரையிறக்குவதற்கு முன்பு எல்லாக் கருவிகளையும் மீண்டும் பரிசோதித்தேன். அனைத்தும் கச்சிதமாக இயங்கியன” என்றார் இவர்.

மற்றொரு சம்பவத்தைக் காண்போம். “Society for the investigation of the unexplained” என்ற ஆராய்ச்சிக்

கழகத்தின் சார்பில் வெளியாகும். "PURSUIT" என்ற காலாண்டுச் சஞ்சிகையில் வெளியானது இது. இந்தக் கட்டுரையை எழுதியவர் ராபர்ட் டுராண்ட் என்பவர்.

## காலிஃப்ளவர் போல

11-4-1963 அன்று அமெரிக்காவில் 707 ரகத்தைச் சேர்ந்த போயிங் விமானம் ஒன்று சான்ஜுவானிலிருந்து பெர்முடாக் கடல் வழியாக நியூயார்க் சென்று கொண்டிருந்தது. விமானம் புறப்பட்ட இருபது நிமிடம் கழித்து மதியம் 1-30 மணிக்கு முப்பதாயிரம் அடி உயரத்தில் பறந்து கொண்டிருந்தது.

அந்த விமானத்தின் துணை விமானி தற்செயலாகக் கடலைத் திரும்பிப் பார்த்துத் திடுக்கிட்டார். விமானத்திலிருந்து ஐந்து மைல் தொலைவில் கடல் நீரில் ஓரிடத்தில் வட்டமாக ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டது. அணுகுண்டு வெடித்தால் புகை எப்படித் தோன்றுமோ அதுபோல் அந்த இடம் காட்சியளித்தது. மிகப்பெரிய காலிஃப்ளவர் போலத் தனக்குத் தோன்றியது என்று அந்தத் துணை விமானி தெரிவித்தார்.

## அகலத்தில் பாதி உயரம்

அவர் உடனே தலைமை விமானியை அழைத்து அந்தக் காட்சியைக் காட்டினார். இருவரும் தங்களது சீட் பெல்ட்களைக் கழற்றி விட்டு வசதியாக நின்று கொண்டு பார்த்தனர். அந்தக் கொந்தளிப்பின் உள் அளவு அதாவது அதன் விட்டம் அரை மைல் முதல் ஒரு மைல் வரை இருக்கலாம் என்று அவர்கள் கணக்கிட்டனர் அதன்

அகலத்தில் பாதியளவு உயரமாக இருக்கலாம், என்றும் முடிவு செய்தனர். விமானம் அந்த இடத்தைக் கடந்தபோது அந்தக் கொந்தளிப்பு சிறிது சிறிதாக அடங்கியது.

தரையிறங்கியதும் அந்த விமானிகள் உடனடியாக கரையோரக் காவல்படை F.B.I. மற்றும் பூகம்ப ஆராய்ச்சியாளர்கள் போன்றவர்களிடம் அதைப் பற்றி விரிவாக எடுத்துரைத்தனர். ஆனால் இந்தச் சம்பவம் பற்றி அவர்களுக்கும் ஏதும் புரியவில்லை.

## அணுசக்தி கப்பல்

இந்தச் சம்பவம் நடப்பதற்கு முதல் நாள் U.S.S. Thresher என்னும் அணுசக்தி நீர்மூழ்கிக் கப்பல் ஒன்று காணாமல் போய்விட்டது. அது மூழ்கி வெடித்ததனால் ஏற்பட்ட கொந்தளிப்பாக அது இருக்கலாம் என்று சிலர் அபிப்பிராயப்பட்டனர். இந்தக் கருத்து உடனே மறுக்கப் பட்டும் விட்டது. காரணம் நீர்மூழ்கிக் கப்பல் தொலைந்து போன இடத்திற்கும் கடல் கொந்தளித்த இடத்திற்கும் இடையில் பல்லாயிரம் மைல் வித்தியாசம் உள்ளது.

இந்த ராணுவக் கப்பல் தொலைந்து போனதற்குப் பழி வாங்கும் பொருட்டு எதிரிக் கப்பல் ஒன்றை அந்த இடத்தில் மூழ்கடித்தார்கள் என்று விளக்கம் சொல்லி யிருந்தால் நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் அப்படி ஏதுமில்லை என்று கடற்படை மறுத்து விட்டது! இப்படிப் பட்ட முறையான காரணங்கள் கூறப்படாத வரையில் பெர்முடா முக்கோணப் பகுதியில் ஏதோ ஓர் அமானுஷ்ய சக்தி வேலை செய்கிறது என்பதாகத் தானே நாம் நினைக்க முடியும்?

## ஆராய்ச்சி செய்பவரின் அனுபவம்

நார்மன் பின் (Norman Bean) என்பவர் மியாமி நகரத்தில் வசிக்கிறார். இவர் எலக்ட்ரானிக் இன்சினியர். கப்பலைத் தாக்க வரும் சுறாமீன்களை விரட்டும் கருவி யையும் கடலுக்கு அடியில் படமெடுக்கும் டெலிவிஷன் கேமிராவையும் இவர் கண்டுபிடித்துள்ளார். பறக்கும் தட்டுகள் பற்றியும்-பெர்முடாக் கடலின் மர்மம் பற்றியும் இவர் ஆராய்ந்து வருகிறார். இந்த ஆராய்ச்சியாளரே கூட ஒரு முறை பெர்முடாக் கடலில் சிக்கித் தவித்துள்ளார்.

அந்தச் சம்பவம் நிகழ்ந்தது 1972-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் ஓர் இரவு.

நைட்மேர் (Nightmare) என்ற பெயருடைய படகு ஒன்று மூன்று பயணிகளுடன் பயணம் செய்து கொண் டிருந்தது. Feather Bed Bank என்ற பகுதிக்கு வந்ததும் அந்தப் படகில் பொருத்தப்பட்டிருந்த திசைகாட்டியின் முள் 90 டிகிரியில் வேறு பக்கமாகத் திரும்பிவிட்டது.

## ஓட்ட முடியவில்லை

படகிலிருந்து பேட்டரிகளின் சக்தியை யாரோ உறிஞ்சி எடுத்தாற்போல் விளக்குகளின் வெளிச்சம் குறைந்து கொண்டே வந்து முற்றிலும் அணைந்து விட்டது.

நிலப்பரப்புக் காணப்பட்ட மேற்குத் திசையை நோக்கி படகை முழு வேகத்துடன் ஓட்ட முனைந்தார்கள். ஆனால் ஏதோ ஒரு சக்தியால் இழுக்கப்பட்டு படகு பின் பக்கமாகவே நகர்ந்தது. கரை சேரும் முயற்சியில்

இரண்டு மணி நேரப் போராட்டம் தோல்வியே கண்டது என்கிறார் படகின் மூன்று பயணிகளில் ஒருவரான நார்மன்பீன்.

## கறுப்பு உருவம்

இந்தச் சமயத்தில்தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. படகிலிருந்து ஓரிரு மைல் தள்ளியிருந்த ஹம்மோக் என்ற ஊரை மறைத்தபடி வானளாவிய ஓர் கறுப்பு உருவம் தோன்றியது. பிரம்மாண்டமான பரிமாணம் கொண்ட அந்த உருவத்தையே பயத்துடன் பயணிகள் பார்த்துக் கொண்டிருந்தபோது ஒரு வெளிச்சம் எங்கிருந்தோ தோன்றியது. அது நகர்ந்து வந்து கறுப்பு உருவத்தின் மேல் சற்று நேரம் நின்று விட்டு மறைந்தது. அதன் பின்னர் அந்தக் கறுப்பு உருவமும் மறைந்தது. அது மறைந்தவுடன் அடுத்த நிமிடமே படகின் திசை காட்டி முள் சரியான இடத்திற்கு நகர்ந்தது. ஜெனரேட்டர் இயங்கி பேட்டரி களுக்குச் சக்தியூட்டியது. படகும் முன்னே செல்ல ஆரம் பித்தது.

அடுத்த முறை உரை நிகழ்த்தியபோது கூட்டத் தினரிடம் இந்தச் சம்பவத்தை எடுத்துரைத்தார் நார்மன்பீன். கூட்டம் முடிந்ததும் அவரைத் தனியே வந்து சந்தித்த முன்னாள் கடற்படைக் கேப்டன் ஒருவர் இதே போன்ற தனது அனுபவத்தை அவரிடம் எடுத்துரைத்தார்.

## இவருக்கும் அப்படியே

இந்த சம்பவம் 1957-ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு ஒரு வாரம் முன்பு நடந்தது. அந்த முன்னாள்

கேப்டன் தனக்குச் சொந்தமான டீசல் இஞ்சின் பூட்டிய 35 அடி நீளப்படகு ஒன்றில் பயணம் செய்து கொண்டிருந்தார். பெர்முடா அருகில் வந்ததும் படகு முன்னே செல்ல முடியாமல் தத்தளித்தது, சில மைல் தூரம் வரை அந்தப் படகு பின் புறமாகத் தள்ளப்பட்டது என்றே கூற வேண்டும்.

ஜெனரேட்டர்-விளக்குகள்-ரேடியோத் தொடர்பு ஆகியவை செயலற்றுப் போய்விட்டன. திசை காட்டி தாறுமாறாச் சுழலத் தொடங்கியது. டீசல் இஞ்சின் இயங்கிக் கொண்டிருந்தாலும் படகு ஏனோ முன்னே செல்ல முடியாமல் மறுத்தது. நைட்மேர் பயணிகளைப் போலவே இந்தப் படகின் மாலுமிகளும் ஒரு பெரிய கறுப்பு உருவம் வானில் தெரியக் கண்டனர். கொஞ்ச நேரத்தில் அந்தக் கறுப்பு உருவம் அகன்றது. உடனே படகு முன்னே செல்லத் தொடங்கியது. இயங்காமல் மறுத்தவை அனைத்தும் இயங்கத் தொடங்கின.

## எல்லாம் சரியே

அந்த விமானம் ஒன்பது பேர்களுடன் மாலை நேரத்தில் புறப்பட்டது. இவர்களில் ஐந்து பேர் விமான ஓட்டிகள் என்பது குறிப்பிடத்தக்கது. வானிலை நன்றாக இருந்தது. கடல் தெளிவாக இருந்தது. விமானம் பறக்கும் போது வெளியில் உள்ள காட்சிகளைத் தெளிவாகக் காண முடிந்தது. தென்கிழக்குத் திசையிலிருந்து காற்று மெல்லியதாக வீசிக் கொண்டிருந்தது.

புறப்பட்ட பத்து நிமிடம் கழித்து விமானத்தில் இருந்த எல்லா மின்சாரக் கருவிகளும் செயலிழக்கத்

தொடங்கின. Hydraulic Controls கூட இயங்க மறுத்து விட்டது. பாட்டரிகள் அனைத்தும் உறிஞ்சப்பட்டது போல் வறண்டு போயின.

இந்த நிலைமையில் விமானியால் என்ன செய்ய இயலும்?

## எல்லாமே தவறின

வடக்குத் திசையில் அறுபது மைல் தூரத்தில் இருந்த New Providence என்ற விமான நிலையத்தில் எப்படியாவது அந்த விமானத்தை இறக்கி விட வேண்டும் என்று விமானி நினைத்தார் ஆனால் அந்த முயற்சி வீண் என்பது அவருக்குப் புரிந்தது. ஏனென்றால் விமானத்திலிருந்து ரேடியோ தொடர்பு துண்டிக்கப்பட்டது. விளக்குகள் ஏதும் எரியாததால் எந்த விதமான சிக்னலும் தர இயலாது. Hydraulic Controls வேலை செய்யாததால் மடக்கி வைக்கப்பட்ட சக்கரங்களை வெளியில் நீட்ட முடியாது. தரையிறங்க உதவும் (Landing lights) விளக்குகளும் எரியாது. இப்படிப்பட்ட நிலையில் அறுபது மைல் பயணம் செய்ய முடியாது, என்பதால் அருகிலிருந்த அண்டிரோஸ் விமான தளத்தில் முன் அனுமதியின்றி விமானத்தை இறக்கி விடத் தீர்மானித்தார்கள்.

## தீப்பொறி பறந்தது

சக்கரம் இல்லாமல் இறங்கும்போது விமானம் தரையில் மோதிச் சிதறவும் வாய்ப்புண்டு என்பதால் அனைவரும் பயத்துடன் அமர்ந்திருந்தனர் ஆனால் அவர்கள் எதிர்பார்த்தபடி எதுவும் நடக்கவில்லை.

விமானத்தின் விசிறிகள் (Propeller) மட்டும் தரையில் மோதி உடைந்து விட்டன. விமானம் சக்கரம் இல்லாத நிலையில் ஓடு பாதையில் இறங்கியதால் ஏகப்பட்ட தீப்பொறிகள் உண்டாயின. ஆனால் விமானம் தீப்பிடிக்க வில்லை. உயிர்ச் சேதமும் இல்லை.

அடுத்த நாள் இரண்டு புதிய விசிறிகள் பொருத்தப் பட்டு விமானம் பழுது பார்க்கப்பட்டது. மெக்கானிக்குகள் வந்து பார்த்தபோது விமானத்தின் கருவிகள் நன்றாக இயங்குவதைக் கண்டார்கள். விமானம் மறுபடியும் கிளம்பி எந்த விதமான அசம்பாவிதமும் இன்றி சேர வேண்டிய நகரத்திற்கு வந்து சேர்ந்தது.

## கப்பலின் கதி

இதன் பிறகு 3-4-1974 அன்று குயின் எலிஸபெத்-2 என்ற கப்பல் பெர்முடாக் கடலின் மர்மச் சக்தியில் சிக்கித் தப்பியது. காரணமே இல்லாமல் மின்சாரத் தடை இயந்திரக் கோளாறு போன்ற காரணங்களால் மிக நவீன வசதிகளைக் கொண்ட இந்தக் கப்பல் பெர்முடாக் கடல் பகுதியில் செயலிழந்து நின்றது.

இதில் மற்றோர் ஆச்சரியம் என்னவென்றால் குயின் எலிஸபெத்-2 கப்பலும் மற்றொரு கப்பலும் 35 நாட் (Knot) வேகத்தில் பயணம் செய்து கொண்டிருந்தபோது எலிஸபெத் கப்பல் முதலில் பெர்முடாப் பகுதியில் நுழைந்தது சில மைல் தூரத்தில் வந்து கொண்டிருந்த துணைக்கப்பலின் ரேடாரில் எலிஸபெத்-2 கப்பல் மறைந்து விட்டது. ரேடியோத் தொடர்பும் அறுந்து விட்டது.

குயின் எலிஸபெத்-2 கப்பலின் கோளாறுக்கான காரணம் பெர்முடாப் பகுதியின் அமானுஷ்யச் சக்திகள் தான் என்பதை விஞ்ஞானிகள் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளவில்லை. அதே சமயம் அந்தக் கப்பலில் ஏற்பட்ட திடீர் கோளாறுக்கான பொறியியல் காரணங் களையும் அவர்கள் அறிவிக்கவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

பொதுவாக பெர்முடாக் கடல் பகுதி இன்றளவும் மர்மமான பகுதியாகவே விளங்குகிறது. ஆராய்ச்சி யாளர்கள் தொடர்ந்து ஆராய்ந்து கொண்டுதான் இருக் கிறார்கள். அவர்களது முயற்சிகளைப் பற்றி அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

# 5. விஞ்ஞானிகளின் விளக்கங்கள்

அமானுஷ்யச் சக்திகள் உண்டு என்பதை ஒப்புக் கொள்ளாதவர்கள் எப்போதும் உண்டு. அந்த இரு பிரிவுகள், பெர்முடா முக்கோண மர்மத்திற்கும் உண்டு. அந்தக் கடல் பகுதியில் எந்த விதமான மர்மமும் இல்லை என்று நிரூபிப்பதற்கு இன்றளவும் பலர் முயல்கின்றனர். அதேசமயம் பெர்முடாக் கடலின் மர்மத்தைப் பற்றி விளக்கி உலகம் முழுவதும் பல புத்தகங்கள் எழுதப் பட்டு வருகின்றன. அமானுஷ்யச் சக்திகள் அங்கே எதுவும் இல்லை என்று மறுத்தும் எழுதப்படுகின்றன. 1975-இல் Lawrence David Kuschhe என்பவர் பெர்முடா முக்கோணத்தின் மர்மம் தீர்ந்தது (The Bermuda Triangle Mystry Solved) என்ற தலைப்பிலேயே புத்தகம் ஒன்றை வெளியிட்டார். ஆனால் அவரது வாதங்களைப் பலர் ஏற்காததால் அந்தப் புத்தகம் எதிர்பார்த்த பலனைத் தர வில்லை. இந்த பெர்முடா முக்கோணத்தின் மர்மம் பற்றி விஞ்ஞானிகள் கூறும் சில விளக்கங்களைக் காண்போம்.

## மாறுபட்ட நீரோட்டம்

பெர்முடா முக்கோணக் கடலில் எந்தவிதமான அமானுஷ்யச் சக்தியோ மர்மமோ இல்லை. இந்த உலகில்

கடல் பிரதேசம் தான் அதிகம் உள்ளது. நீரோட்டமானது கடலின் மேல் மட்டத்தில் ஒரு திசையிலும் அடி மட்டத்தில் வேறு திசையிலுமாக மாறுபட்டிருக்கும்.

பஹாமாவுக்கும் ஃப்ளோரிடாவுக்கும் இடையில் உள்ள விரிகுடாக் கடல் பகுதியில் நீரோட்டத்தின் வேகம் மிகவும் அதிகம். இதில் அடித்துச் செல்லப்படும் படகு களும் கப்பல்களும் சில நொடிகளில் நம் கண்ணிலிருந்து மறைந்து விடும். திடீரென்று பார்த்தால் கப்பல்கள் மாயமாய் மறைந்து விட்டது போல் தான் இருக்கும். ஆனால் கடற்பாதுகாப்புப் படையினருக்கு இந்த வேகம் தெரிந்த விஷயமாதலால் மீட்புப் பணியின் போது, காணாமல் போனது. கப்பலானால் 6 மைல் சுற்றளவிற்கும்-விமானமானால் 10 மைல் சுற்றளவிற்கும்-சிறிய பட கானால் 15 மைல் சுற்றளவிற்கும் சென்று தேடுவார்கள்.

## மூழ்கி மீண்டும் மிதந்தது

சில கப்பல்கள் மூழ்கிய பிறகு சில காலம் கழித்து வேறு இடத்தில் மீண்டும் நீர் மட்டத்தின் மேல் வந்து மிதப்பதுண்டு. உதாரணமாக A Ernest miles என்ற கப்பல் உப்பு ஏற்றிக் கொண்டு வந்தபோது கரோலினாக் கரையில் மூழ்கி விட்டது. ஆனால் அதிலிருந்த உப்பு கரைந்ததும் அந்தக் கப்பல் வேறு ஓர் இடத்தில் தானாகவே மிதக்கத் தொடங்கி விட்டது.

1935-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் La Dahama என்ற கப்பல் கடலில் மூழ்க ஆரம்பித்தது. உடனே S.S. Rex என்ற கப்பல் விரைந்து சென்று அதிலிருந்த பயணிகளைக்

காப்பாற்றியது. சில மாதங்கள் கழித்து வேறு இடத்தில் Aztec என்ற கப்பல் பயணித்துக் கொண்டிருந்தபோது La Dahama கப்பல் தன்னிசையாக ஆட்கள் இல்லாமல் மிதப்பதைக் கண்டு பயந்து விட்டனர். பிறகு S.S. Rex கப்பலிலிருந்து செய்தி வந்ததும் தான் குழப்பம் நீங்கியதாம். கடலுக்குள் மூழ்கிய La Dahama எப்படித் தானாக மேலே வந்து மிதந்தது. அதிலிருந்த நீர் எப்படி வெளியேறியது என்பது இன்று வரை மர்மமாகவே உள்ளது.

## கடலுக்குள் சிதைவுகள்

காணாமல் போன கப்பல்கள் மற்றும் விமானங்களின் சிதைவுண்ட பாகங்கள் நீர்மூழ்கி மனிதர்களால் (Sea divers) கண்டு பிடிக்கப்படும் வரையில் ஆழ்கடலில் மணற் குவியல்களில் புதைந்து கிடக்கின்றன. அரிய பொக்கிஷங் களை ஏற்றிச் செல்லுகையில் கடலில் மூழ்கிவிட்ட பழங்காலக் கப்பல்களைக் கண்டுபிடித்து அந்தப் புதையல்களை மீட்கும் பணியில் அனுபவம் நிறைந்தவர் மேல் ஃபிஷர் (Melfisher) என்பவர். ஏராளமான தங்கத்தை ஏற்றிக் கொண்டு ஸ்பானிஷ் நாட்டிலிருந்து புறப்பட்டு பெர்முடாக் கடலில் மூழ்கி விட்ட கப்பல் ஒன்றைத் தேடும் பணியில் மேல் ஃபிஷர் ஈடுபட்டபோது மற்றவர்களுக்குக் கிடைக்காத பல சங்கதிகள் இவருக்குக் கிடைத்ததுண்டு.

## கடலுக்குள் ரயில்

இதற்கு காரணம் இவர் உபயோகித்த சக்திவாய்ந்த கருவியாகும் (Magnetometer) இந்தக் கருவியின் உதவியால் இவர் கடலுக்குள் மூழ்கித் தேடும்போது இவர்

எதிர்பார்த்துச் சென்ற ஸ்பானிஷ் கப்பலுக்குப் பதிலாக பல்வேறு வகையான போர் விமானங்களையும் தனியார் விமானங்களையும் மற்றும் பலவகைப்பட்ட கப்பல் களையும் அவர் கண்டுபிடித்துள்ளார். ஒரு சமயம் முழுமையான ரயில் இஞ்ஜின் ஒன்றைக் கூட கடலுக்கு அடியில் கண்டதாக இவர் தெரிவித்துள்ளார்.

## கடலுக்குள் வெடிகுண்டு

கடலில் போர் ஒத்திகைகளை நிகழ்த்தும் ராணுவக் கப்பல்கள் எதிர்பாராமல் மோதுவதால் அல்லது அவற்றால் சுடப்பட்டு வெடிக்காமல் கடலுக்கடியில் கிடந்த வெடிகுண்டுகள் எதிர்பாராமல் வெடிப்பதால்தான் பயணிகள் கப்பல்கள் காணாமல் போய் இருக்க வேண்டும் என்று மேல்ஃபிஷர் அபிப்பிராயப்படுகிறார். ஒரு முறை கடலுக்கடியில் கிடைத்த ஒரு பெரிய உலோகப் பொருளைக் கைப்பற்றி இழுத்துக் கொண்டு கடலின் மேல் மட்டத்திற்கு வந்து பார்த்துத் திகைத்து விட்டாராம். ஏனென்றால் அது ஒரு பெரிய வெடிகுண்டு. (அது வரை வெடிக்காதது) உடனே அதை அவசரமாகக் கடலுக்குள் தள்ளிவிட்டார்.

## கடலுக்குள் புதையல்

ஸ்பானிஷ் நாட்டைச் சேர்ந்த La Margarita மற்றும் Santa Maria de Atocha என்ற பெயருடைய இரண்டு பெரிய கப்பல்கள் முறையே 40 கோடி டாலர் மற்றும் 60 கோடி டாலர் மதிப்புள்ள தங்க வைடூரியங்களுடன் மூழ்கி விட்டதாகக் கருதப்படுகிறது. அந்தக் கப்பல்களையும் தேடும் பணி இவரிடமே ஒப்படைக்கப்பட்டது. அந்த

முயற்சியின் போது இவர் உடைந்து சிதறிய வேறு சில கப்பல்களைக் கண்டுபிடித்தவர். ஆனால் அவற்றின் மீது பெரும் மணற்குவியல்கள் மூடியிருந்ததாக இவர் கூறுகிறார்.

கடல் நீரோட்டத்தின் திசை-வேகம் அடிக்கடி மாறுபடுவதால் மூழ்கிய கப்பல்கள் பலவற்றைக் கண்டு பிடிக்க முடிவதில்லை. இதைத் தவிர வேறு சில காரணங்களும் இருக்கக் கூடும் என்கிறார் மேல் ஃபிஷர். பஹாமாவில் உள்ள சுண்ணாம்பு மலைகள் மற்றும் ஆழ்கடல் சுண்ணாம்புப் படிவங்களில் காணப்படும் **Blue Holes** எனப்படும் குகைகளை உதாரணமாகச் சொல்லலாம்.

## கடலுக்குள் குகை

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கடலின் மேல் மட்டத்தில் இருந்த இந்தக் குகைகள் கடல் நீர்மட்டம் உயர்ந்த போது கடலுக்குள் போய்விட்டன. இதே போன்ற குகைகள் கடலின் அடி மட்டத்தில் 1500 அடி ஆழத்தில் உள்ள சுண்ணாம்புப் படிவங்களிலும் காணப்படுகின்றன. உள் நாட்டு ஏரிகள் மற்றும் குளங்களுடன் இந்தக் கடல் குகைகள் இணைக்கப்பட்டுள்ளன என்பதும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இதனால் கடலில் மட்டுமே உற்பத்தியாகும் சில அபூர்வ மீன் வகைகள் குளங்களிலும் ஏரிகளிலும் காணப்பட்டு மறைவது சகஜமான நிகழ்ச்சியாகும். ஒரு சமயம் 20 அடி நீளமுள்ள கடல் சுறா ஒன்று உள்நாட்டில் இருக்கும் இயற்கைக் குளத்தில் திடீரென்று தோன்றி அங்கிருந்த மக்களை கதிகலங்க அடித்து விட்டது.

## குகைக்குள் கிளைகள்

நீலத்துவாரம் எனப்படும் இந்தக் குகைகள் கடல் மட்டத்தில் பல்வேறு ஆழங்களில் காணப்படுகின்றன. நீர் மூழ்கி மனிதர்கள் இந்தக் குகைகளில் நுழைந்து பார்த்த போது அவற்றுக்குள் பல கிளைகள் பிரிவுகளைக் கண்டார்கள். மீன்களுக்கே கூட குழப்பத்தை ஏற்படுத்தும் வகையில் அவை பல்வேறு திசைகளில் பிரிந்து செல் கின்றன.

அது மட்டுமல்ல இந்தக் குகைகளுக்குள் நீரோட்டம் மிகவும் பயங்கரமாக இருக்கிறதாம். பெரும் அலைகள் இந்தக் குகைகளுக்குள் வேகமாக நுழையும் போது நீரின் மேல் மட்டத்தில் சுழல்கள் ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. அந்தச் சமயத்தில் அங்கு வந்து சேரும் படகுகளை அந்தச் சுழல்கள் தனக்குள் இழுத்துக் கொண்டு அப்படியே குகைக்குள் செருகி விடுகின்றன.

## கிளைக்குள் படகுகள்

இப்படி சிக்கிக் கொண்ட படகு ஒன்றை ஜிம் தார்ன் (Jim Thorne) என்ற கடல் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்த போதுதான் மேற்சொன்ன விபத்தின் சாத்தியக்கூறு பற்றி அனைவரும் ஆராயத் தொடங்கினார்கள்.

ஆனால் சிறிய-பெரிய படகுகள் இந்தக் குகை களுக்குள் நுழைந்து மறைந்து விட்டன என்று வைத்துக் கொண்டாலும் பெரிய கப்பல்கள் மறைவதற்கும் இது தான் காரணம் என்பதை நம்மால் ஏற்க இயலாது. அது

மட்டுமல்ல, விமானங்கள் மறைவதற்கு நிச்சயம் இந்தக் குகைகள் காரணமாக இருக்க முடியாது அல்லவா? நன்கு சிந்தித்துப் பாருங்கள்.

சுழல்கள் உலகின் பல்வேறு கடல்களிலும் காணப் பட்டாலும் நார்வே நாட்டுக்கு அருகில் உள்ள கடல் சுழல் போல வேறு எங்கும் இருக்காது. இதைப் பற்றி எட்கர் ஆலன் போ என்பவர் தனது அனுபவத்தை A Descent into the Maelstrom என்ற நூலில் விவரிக்கிறார்;

## கடலில் மிதந்தேன்

"அந்தப் பயங்கர அனுபவத்தை என்னால் மறக்க முடியாது. எனது படகு ஏதோ மந்திரத்தால் கட்டுண்டதைப் போல் அந்தப் பெரிய ஆழமான சுரங்கத்திற்கு மேல் சுழன்று கொண்டிருந்தது. படகைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நான் கண்களை மூடிக் கொண்டேன்."

"நான் கண்களைத் திறந்தபோது என்னைச் சுற்றிலும் கடலில் உடைந்த கப்பல்களின் துண்டுப்பாகங்கள் வீட்டு மரச்சாமான்கள்-பாத்திரங்கள்-பெரிய மரத்துண்டுகள்-உடைந்த பெட்டிகள் என பல பொருள்களும் மிதந்து கொண்டிருந்தன. நான் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவை ஒவ்வொன்றாக சுழலுக்குள் இழுக்கப்பட்டு மறைந்தன. இதை நான் வேடிக்கை பார்க்க ஆரம் பித்தேன்.

"அதோ அந்த ஃபிர் (Fir) மரம்தான் அடுத்து மூழ்கப் போகிறது என்று நினைப்பேன். ஆனால் எங்கிருந்தோ ஒரு

டச்சு நாட்டு வணிகக் கப்பலின் சிதைந்த துண்டு ஒன்று சுழன்று வந்து ஃபிர் மரத்திற்கு முன்பாக மூழ்கி மறையும்...."

இப்படிப் பலர் எழுத ஆரம்பித்ததால் தான் பெர்முடாக் கடலிலும் சுழல்களில் அகப்பட்டுக் கப்பல்கள் மறைந்து விட்டன என்று பலர் தவறாக முடிவு செய்து விட்டனர். அதே சமயம் கடலிலும் சில அபாயங்கள் இல்லாமலில்லை.

## நீர் ஸ்தம்பங்கள்

நிலத்தில் எப்படி சுழல்காற்று பெரிய வீடுகள்-வேலிகள் போன்றவற்றை அழிக்கின்றதோ அதுபோல நீர்ஸ்தம்பங்கள் என்னும் அபாயத்தால் சிறிய படகுகளும் விமானங்களும் சிதைக்கப்படுகின்றன. பகலை விட இரவில் இந்த ஆபத்து அதிகம். *நீர்ஸ்தம்பம் என்பது ஒரு வகைச் சுழலே. இந்த வகையில் கடல் நீர் சுழற் காற்றுடன் ஆகாயத்தில் பீய்ச்சியடிக்கப்படும். ஒரு தென்னை மரத்தின் பருமனுக்கு அந்த நீரின் கனம் இருக்கும்.

எதிர்பாராமல் உருவாகும் பெரிய அலைகள்தான் கப்பல்கள் காணாமல் போவதற்குக் காரணம் என்றும் பலர் சந்தேகப்படுகிறார்கள். ஒரு பெரிய அலை உருவாவதற்குப் பல காரணங்கள் உள்ளன.

கடல் நீரின் அடியில் ஏற்படும் பூகம்பம்-நிலச்சரிவு சூறைக்காற்று - (அருகில் நிகழ வேண்டும் என்ற அவசியம் இல்லை) எரிமலைகள் வெடித்தல் ஆகியவற்றால் பெரிய அலைகள் ஏற்படுகின்றன. கொஞ்சம் ஆழம் அதிகமான

கடலில் குறைந்தது 112 அடி உயரத்திற்குக் கூட அலைகள் எழும்பும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

## அடேயப்பா!

நீரின் அடியில் உண்டாகும் பூகம்பத்தால் தோன்றும் பெரிய அலைகள் 200 அடி வரை உயரும் என்று சொல்லப்படுகிறது. எதிர்பாராத நேரத்தில் திடீரென்று தோன்றும் இந்த அலைகள் நங்கூரம் பாய்ச்சப்பட்டிருக்கும் கப்பலை மூழ்கடித்து விடும். பயணம் செய்யும் கப்பல்களைக் கவிழ்த்து விடும்.

கப்பல்கள் இப்படி திடீரென்று பெரும் அலைகளால் மறைவதைப் போல விமானங்கள் ஆகாயத்தில் மறைய வாய்ப்புண்டா? என்று காண்போம்.

கடலில் இருப்பதைப் போலவே மேகங்களுக்கிடையிலும் காற்றுச் சுழல்கள் உண்டு, வெவ்வேறு உயரங்களில் காற்று வெவ்வேறு வேகத்தில் வீசுவதால் ஏறி இறங்கும்போது விமானம் இந்தக் காற்றைச் சமாளித்தாக வேண்டும். இந்தக் காற்றில் சுழல்கள் உருவாகி அது வேகமாக நகரும்போது விமானம் அதைக் குறுக்கிட நேர்ந்தால் கல் சுவர் மீது மோதியதைப் போல சிதைந்து விட வாய்ப்புண்டு.

## நவீன கருவிகள்

தொலைந்து போகும் விமானங்களை எளிதில் கண்டுபிடித்துவிடக் கூடிய நவீன சாதனங்கள் தற்சமயம் நடைமுறைக்கு வந்து விட்டன. இந்தக் கருவிகள்

அப்போது இல்லை. தவிர இந்த அளவு கம்ப்யூட்டரின் உபயோகமும் இல்லை.

தற்கால விமானங்களில் கம்ப்யூட்டரால் இயக்கப் படும் Aids என்ற கருவி பொருத்தப்படுகிறது. (இந்த வார்த்தையானது எய்ட்ஸ் வியாதியைக் குறிப்பதல்ல. Airborne Integrated Data Systems என்பதன் சுருக்கமே இந்த எய்ட்ஸ்).

விமானம் நொறுங்கி விட்டாலும் இந்தக் கருவியைக் கண்டுபிடித்து இயக்கிப் பார்த்தால் என்ன நடந்தது என்பதை அறிந்து விடலாம். விமானியின் அறையில் நடைபெறும் அத்தனை பேச்சுக்களும்-நிகழ்ச்சிகளும் இதில் பதிவாகும். இதைத் தவிர விமானத்தின் வால் பகுதியில் crash அல்லது Recovery Beacon என்ற சிறிய ஒலி பரப்புக் கருவியும் பொருத்தப்படுறது. விமானம் விபத்துக்குள்ளானால் அல்லது அதன் மின்னணு அமைப்பில் கோளாறு ஏற்பட்டால் இந்தக் கருவி தானாகவே இயங்க ஆரம்பித்து அடுத்த இரண்டு மூன்று தினங்களுக்கு சிக்னல்களை அளித்துக் கொண்டிருக்கும். இதைக் கொண்டு அந்த விமானம் இருக்குமிடத்தை அறியலாம்.

## பயனற்றவையே

ஆனால் பெர்முடாக் கடல் பகுதியில் விமானங்கள் காணாமல் போகும் போதோ அல்லது பாதிக்கப்பட்டு மீளும் போதோ அதன் அனைத்து மின் கருவிகளும் ரேடியோ சாதனங்களும் பழுதடைந்து விடுகின்றன

என்னும்போது இந்த நவீன கருவிகளும் பயனற்றவை தானே. நன்கு சிந்தனை செய்யுங்கள்.

மின்காந்தக் கருவிகள் ஒட்டு மொத்தமாக பழுதடைவது என்பது பெர்முடாக் கடல் மர்மத்தில் ஒரு பொதுவான அம்சமாகும். ஹக் ஏஷின் கிளாஸ் என்ற மின்சார இஞ்சினியர் ஒருவர் "Cataclysms of the Earth" என்ற தனது நூலில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்.

"இந்தச் சம்பவங்களுக்கும் பூமியின் மின்காந்த அலைகளுக்கும் தொடர்பு உண்டு. உலக சரித்திரத்தில் பூமியின் மின் காந்த அமைப்பில் பலமுறை மாறுதல்கள் ஏற்பட்டுள்ளதை அறிவோம். இப்போதும் அப்படிப்பட்ட ஒரு மாறுதல் நிகழ்ந்து வருகிறது என்று கூறலாம். சில விமானங்கள் காணாமல் போவதற்கும்-காணாமல் போன சில கப்பல்கள் மீண்டும் கடலில் தோன்றுவதற்கும் இந்த மின் காந்த மாறுதல்தான் காரணம்...."

## உண்மை உண்மையே!

வில்பர்ட். பி. ஸ்மித் (Wilbert. B. Smith) என்ற கனடா நாட்டு எலக்ட்ரானிக்ஸ் நிபுணர் மேலே சொன்ன காரணங் களை ஒப்புக் கொள்கிறார்.

சில குறிப்பிட்ட இடங்களில் அளவிற் சிறிதான (ஆயிரம் அடி நீளம். ஆனால் உயரம் அதிகம்) சுழல்கள் விமானங்களையே உடைத்து விடும் அளவுக்கு ஆற்றல் பெற்றிருப்பதை இவர் கண்டிருப்பதாகக் கூறுகிறார். மின் காந்தம் மற்றும் புவியீர்ப்புச் சக்தியின் மாற்றங்களால் ஏற்படும் இந்தச் சுழல்கள் இருப்பதை யாரும் உணர

முடியாது. ஆனால் அவற்றுக்குள் சிக்கிக் கொண்டாலோ வெளியேறவே முடியாது. இந்தச் சுழல்கள் நகர்ந்து வேறு இடத்திற்குச் சென்று விடுகின்றனவா அல்லது அப்படியே மங்கி மறைந்து விடுகின்றனவா என்பதை அறிய முடிய வில்லை. காரணம் சில நாட்கள் கழித்து அந்த இடத்திற்கு மீண்டும் சென்றால் அந்தச் சுழல்கள் இருந்த அடையாளம் கூட இருப்பதில்லை என்கிறார் வில்பர்ட். பி. ஸ்மித்.

## ஒன்றும் புரியவில்லை

மீட்புப்பணி செய்யும் கடற்கரைக் காவல் படையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் பின் வருமாறு கூறுகிறார்:

"உண்மையைச் சொல்லப் போனால் பெர்முடா முக்கோணப் பகுதியில் என்ன நடக்கிறது என்றே எங்களுக்குப் புரியவில்லை. நடப்பதைப் பற்றிய காரணங் களை யூகித்துக் கொண்டிருக்க முடிகிறதே தவிர தடுக்க முடியவில்லை. நடப்பது நடந்து கொண்டுதான் இருக்கிறது இங்கு நடப்பதை ஆராய்வதற்காகக் கடற்படையானது. Project Magnetism என்ற அமைப்பை ஏற்படுத்தியுள்ளது. 1945-இல் விமானங்கள் காணாமல் போனதற்கு இப்படிப் பட்ட காந்த சக்தி மற்றும் புவியீர்ப்பு அமைப்பில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக இருக்கலாம் என்று இந்த அமைப்பின் நிபுணர்கள் கூறுகிறார்கள். வானத்தில் அப்போது ஒரு பெரிய தீப்பந்தைக் கண்டதாக ஒரு கப்பல் தெரிவித்தது. அது இரண்டு விமானங்கள் ஆகாயத்தில் மோதிக் கொண்டதால் ஏற்பட்ட ஒளியாக இருக்கலாம். ஆனால் ஐந்து விமானங்களைப் பொறுத்த மட்டில் அது சாத்திய மில்லை. எங்களுக்கு வேறு ஒன்றும் சொல்லத் தோன்ற

வில்லை. அவ்வளவுதான்" என்று அந்த கடற்பாதுகாப்பு அதிகாரி கூறியுள்ளார்.

## அமானுஷ்யமே இல்லை

பெர்முடாவுக்கு அருகில் உள்ள ஏழாவது கடற் கரைப் பாதுகாப்பு பிரிவு எழுதிய ஒரு கடிதத்தில் பின் வருமாறு தெரிவிக்கிறது:-

...இங்கு நிறையக் கப்பல்கள் காணாமல் போன தற்குப் பல விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன. ஆனால் அவற்றுள் சுற்றுப்புறச் சூழ்நிலை மற்றும் மனிதத் தவறுகள் ஆகியவைதான் நடைமுறைக்குப் பொருந்துகிறது என்று சொல்லலாம்."

"இங்குள்ள நீரோட்டம் மற்றொரு காரணம். அது மிகவும் வேகமாகவும் குழம்பியும் இருக்கிறது. அதனால் எந்த அசம்பாவிதம் நடந்தாலும் அடையாளம் தெரியாத படி உடனே மறைந்து விடுகிறது. அங்கு நிலவும் தட்ப வெப்ப நிலையும் ஒரு காரணம். எதிர்பாராத நேரத்தில் நிகழும் புயலும். பீய்ச்சியடிக்கும் நீர்ஸ்தம்பமும் விமானி களுக்கும் மாலுமிகளுக்கும் சிம்ம சொப்பனமாகவே விளங்குகின்றன."

"கடல் மட்டத்திலுள்ள பெரும் சுரங்கம் போன்ற அமைப்பும் ஏராளமான மீன் கூட்டங்களும் நீரோட்டத் தின் தன்மையை மாற்றுகின்றன."

## அறியாமை

"மனிதத் தவறையும் குறைத்து மதிப்பிட முடியாது. இங்கு வரும் உல்லாசப் பயணிகளில் பலர் ஆபத்தான

இந்தப் பகுதியைப் பற்றி அறியாமல் சிறிய படகில் கடக்க முயன்று விபத்துக்குள்ளாகிறார்கள்.

"சுருக்கமாகச் சொல்வதானால் கரைப் பாதுகாப்புப் படை இங்கு நடக்கும் சம்பவங்களுக்கு அமானுஷ்யக் காரணங்களை ஒப்புக் கொள்வதில்லை. மனிதனின் தவறும் இயற்கையின் ஒட்டு மொத்தச் சக்தியும் சேர்ந்து கற்பனைக் கதைகளை மிஞ்சும் விதத்தில் சில சம்பவங்களை நிகழ்த்திக் காட்டுகின்றன என்றே நாங்கள் கருதுகிறோம்" என்று அந்தக் கடிதம் கூறுகிறது.

## இல்லவே இல்லை

கரையோரக் காவல் படையின் இந்தக் கருத்தை சில சிவிலியன் அதிகாரிகளும் ஏற்கிறாகள். திருமதி. அத்லே காம்பர் என்ற பெண்மணி Red Air Craft என்ற அமைப்பின் தலைவர். இவர் ஒரு விதவை. இவரது கணவர் ஓட்டிச் சென்ற விமானம் பெர்முடாக் கடலில் காணாமல் போய் விட்டது. காணாமல் போன விமானங்களைக் கண்டு பிடிக்கும் பணிக்காக இந்தப் பெண்மணி பலமுறை பெர்முடாக் கடலின் மீது பறந்திருக்கிறார்.

பெர்முடாக் கடலில் எந்த விதமான அமானுஷ்ய சக்திகளும் இல்லை என்றே இவரும் நம்புகிறார். பல விமானிகள் ஆபத்தின் போது ஏன் அவசர உதவிச் செய்தியை (S. O. S. Singnal) அனுப்புவதில்லை என்பதற்கு இவா கூறும் காரணம்:-

"ஆபத்தில் இருக்கிறோமா என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளவே வெகு நேரம் பிடிக்கிறது. ஆனால் அதை அவர்கள் உணரும்போது நிலைமை கட்டு மீறிப்

போய் விடுகிறது. ரேடார் - ரேடியோ சாதனங்கள் கெட்டு விடுகின்றன.

"மேலும் விானத்தால் ஒரு குறிப்பிட்ட அளவு தான் அழுத்தத்தைத் தாங்க முடியும். அளவு மீறும்போது அது சுக்குநூறாகச் சிதறி விடுகிறது. மனிதனால் இயற்கைச் சக்தியை மிஞ்ச முடியாது என்ற திடமான முடிவுக்கு நான் வந்திருக்கிறேன்" என்கிறார் இவர்.

பாதிக்கு மேற்பட்ட சம்பவங்கள் பைலட்டின் தவறினால் நிகழ்ந்தது என்றும் 25% பெட்ரோல் தீர்ந்து போனதால் நிகழ்ந்தது என்றும் அவர் கருதுகிறார்.

## நமது சந்தேகம்

இவரது கூற்றையும் நம்மால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. எல்லா விமானங்களும் நன்கு பரிசோதிக் கப்பட்டு பெட்ரோல் நிரப்பப்பட்ட பிறகே பறப்பதற்கு அனுமதிக்கப் படுகின்றன. எனவே பெட்ரோல் தீர்ந்து விட்டது என்ற காரணம் பொருந்தாது.

எல்லா விமானங்களும் ஒரே இடத்திலோ அல்லது ஒரே விதமான காற்றழுத்தத்திலோ மறைந்து போக வில்லை. பல்வேறு சூழ்நிலைகளிலும் பல்வேறு தட்ப வெப்ப நிலைகளிலும் அவை மறைந்துள்ளன.

இதைத் தவிர விமானங்களுக்குக் கூறப்படும் காரணங்கள் கப்பல் மறைவதற்குப் பொருந்தாது. எல்லா விமானச் சம்பவங்களுக்கும் பின்னணியில் ஏதோ ஒரு காரணம் காட்டப்பட்டாலும் கப்பல் மறையும் காரணங்கள் இன்னும் மர்மமாகவே உள்ளன. கப்பல்கள்-விமானங்கள்

இரண்டின் மறைவிற்கும் பொதுவான சில காரணங்கள் தான் இருக்கும் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இவர்கள் அளிக்கும் புதுப்புது விளக்கங்கள் நமக்கு புதுப்புது சந்தேகங்களைத்தான் தோற்றுவிக்கின்றன.

## மன நோயாளிகளா?

இதைத் தவிர மற்றுமொரு சோதனையும் நிகழ்த்தப் பட்டுள்ளது...பெர்முடாக் கடல் பகுதிகளில் விபத்து ஏற்பட்டு அதிலிருந்து தப்பி வந்தவர்களின் மனநிலையை ஆராய்ச்சியாளர்கள் சோதித்தனர். அங்குள்ள காந்த சக்தியினால் மனநிலை பாதிக்கப்பட்டு இவர்களாகவே விபத்தை உண்டாக்கியிருக்கலாம் அல்லவா;

ஆனால் சோதனையின் முடிவுகள் ஆராய்ச்சி யாளர்களுக்கு ஏமாற்றத்தையே அளித்தன. ஏனென்றால் ஆச்சரியம் பயம் போன்ற உணர்ச்சிகள் தவிர வேறு எந்த விதமான மனத்தடுமாற்றத்தையும் அந்த மனிதர்கள் அடையவில்லை என்பது தெரிந்தது.

எனவே இன்னது என்று வரையறுக்க முடியாத ஒரு மர்மத்தைப் பெற்றுள்ள பெர்முடா முக்கோணப் பகுதி யையும் அங்கு நிகழும் விபத்துகளையும் ஆராய்ந்து வருபவர்கள் புதிதுபுதிதாக விளக்கங்களைத் தந்த வண்ணமாகத்தான் இருக்கிறார்கள்.

பெர்முடாக் கடல் பகுதி இயற்கைச் சட்டத்திற்கு மாறுபட்டு இருப்பதாக அவர்களில் சிலர் கூறுகிறார்கள்.

- அந்த இடத்திற்கு நேராக வானத்தில் கண்ணுக்குத் தெரியாத துவாரம் போன்ற அமைப்பு இருப்பதாகவும்

அதன் வழியாகவே விமானங்களும் கப்பல்களும் வேறு உலகிற்குள் இழுக்கப்பட்டு விடுவதாகவும் சிலர் கூறு கிறார்கள்.

இந்தச் சம்பவங்களுக்குக் காரணம் தொலை தூரத்திலுள்ள வேற்றுக் கிரகத்திலிருந்து வரும் மனிதர்களே என்றும் சிலர் கூறுகிறார்கள்.

இறந்துபோன மனிதர்கள் ஆவிகளாக வாழ் கிறார்கள். அவர்கள் வாழும் உலகம் ஆவி உலகம் எனப்படும். அந்த ஆவி உலகம் இருக்கும் இடம் பெர்முடாக் கடல் பகுதியாகத் தான் இருக்கும் அந்தப் பகுதியில் பயணம் செய்யும் கப்பல்களும்-விமானங்களும் தங்களுக்குத் தொந்தரவாக இருக்கும் போது ஆவி உலக வாசிகள் அவற்றைத் தங்கள் உலகிற்குள் இழுத்துக் கொள்கிறார்கள். அந்த ஆழ்கடலில் தான் ஆவி ராஜ்யம் உள்ளது. காணாமல் போனவர்கள் அங்கு தான் இருக் கிறார்கள் என்றும் சிலர் கூறுகிறார்கள்.

நம் காலத்திற்கு அப்பாற்பட்ட தொன்மையான வேறு ஓர் அறிவியல் தோற்றுவித்த சக்தியே இதற்குக் காரணம் என்றும் சிலர் கூறுகிறார்கள்.

## இன்னும் ஓர் இடம் உண்டு

பெர்முடாக் கடல் பகுதியின் குழப்பம் இத்துடன் நிற்கட்டும். இதே போன்ற ஒரு மர்மமான கடற்பகுதி ஜப்பானுக்குத் தெற்கிலும் உள்ளது. அங்குள்ளவர்கள் அதை பேய்க்கடல் (Devil's Sea) என்று குறிப்பிடுகிறார்கள். இங்கேயும் பல கப்பல்கள் மாயமாய் மறைந்ததுண்டு.

ஒரு சமயம் சில கப்பல்கள் சேர்ந்து ஒன்றாக மீன் பிடிப்பதற்காக இந்த பேய்க்கடல் பகுதிக்குள் சென்றன. ஒரு மைல் இடைவெளிவிட்டு ஒன்றன் பின் ஒன்றாக அவை சென்று கொண்டிருந்தன.

அப்போது முதலில் சென்ற கப்பல் பின்னால் வந்து கொண்டிருந்த கப்பல்களின் கண்ணெதிரில் திடீரென்று மாயமாய் மறைந்துவிட்டது. அது மறைந்த இடத்திற்கு மற்றக் கப்பல்கள் வந்தபோது அந்த இடத்தில் காற்று மிகவும் விசித்திரமான முறையில் தளதளப்பது போல் இருந்ததாம்.

புயல் வருவதற்கு முன்பு உள்ளத்தில் தோன்றும் விளக்க முடியாத விபரீத உணர்வைப் போன்ற ஓர் உணர்வு அந்த இடத்திற்கு வந்தபோது தோன்றியதாக மாலுமிகள் கூறியிருக்கிறார்கள்.

இந்தப் பகுதியிலும் காந்த மண்டல மாறுதல் உள்ளது என்றும்-மனிதத் தவறுகள் தான் காரணம் என்றும் யாராவது சொல்லிவிடக் கூடும். கடலில் தான் இப்படி என்றால் தரையில் நடக்கும்போதே மாயமாய் மறைந்து போன மனிதர்களைப்பற்றி நீங்கள் அறிந்ததுண்டா? அந்தச் சம்பவங்களும் இந்த உலகில் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன. அவர்கள் கடலுக்குள் உள்ள சுழலில் அகப்பட்டு குகைக்குள் இழுக்கப்பட்டார்கள் என்றும் நீர்ஸ்தம்பத்தால் தாக்கப்பட்டார்கள் என்றும் நீங்கள் அவ்வளவு எளிதாகக் கூறித் தப்பிக்க முடியாது. அந்தச் சுவையான உண்மைச் சம்பவங்களை அடுத்த பகுதியில் காண்போம்.

# 6. காற்றில் கரைந்த மனிதர்கள்

**ம**னிதர்கள் காட்டில் வழி தவறியோ அல்லது தண்ணீரில் மூழ்கியோ மற்றும் பல்வேறு விதங்களிலோ காணாமல் போவதுண்டு. ஆனால் காற்றில் கரைந்து விட்டார்கள் என்று சொன்னால் நம்ப முடியுமா?

நம்பித்தான் தீரவேண்டும். ஏனென்றால் அப்படிப் பட்ட சம்பவங்கள் இந்த உலகம் முழுதும் நடை பெற்றுள்ளன. இங்கிலாந்து கோர்ட்டு ஒன்றில் இதே காரணத்தைக் கூறி விவாகரத்தும் பெற்று விட்டார் ஒரு பெண்மணி. அவரது பெயர் கிறிஸ்டைன் ஜான்ஸ்டன் என்பதாகும்.

## புதுமணத் தம்பதிகள்

1975-ஆம் ஆண்டில் 22 நாட்களுக்கான கோடை விடுமுறையை இன்பமாகக் கழிப்பதற்காகத் தனது கணவர் ஆலன் ஜான்ஸ்டனுடன் துருவப்பிரதேசத்திற்குச் சென்றார் அவர்.

புதுமணத் தம்பதிகளான அவர்கள் தங்களது விடுமுறையின் ஒவ்வொரு விநாடியையும் மனம் கொண்ட மட்டும் அனுபவித்தார்கள். அவர்கள் நினைத்தபடியே

துருவப் பிரதேச விடுமுறை அனுபவம் வாழ்வில் மறக்க முடியாதபடி அமைந்துவிட்டது. அதாவது ஒரு மாறுபட்ட சூழ்நிலையில் அந்தக் கணவன் மறைந்துவிட்டார்.

நிகழ்ந்தது இதுதான்:- துருவப் பிரதேசத்தின் ரஷிய எல்லையை ஒட்டி அமைந்துள்ள லாப்லாந்து பகுதியில் ஆள் அரவமற்ற ஒரு மாதா கோயிலை ஒட்டிப் படர்ந் திருந்த ஒற்றையடிப்பாதை வழியாக இருவரும் பேசிக் கொண்டே மெதுவாக நடந்து சென்றார்கள்.

## காணவில்லை

கணவரின் கழுத்தில் கேமரா ஊசலாடியது. அந்தப் பாதையின் திருப்பத்தில் ஜான்ஸ்டன் சில புகைப் படங்களை எடுக்க ஆரம்பித்தார். அவரது மனைவி கிறிஸ்டைன் மேலும் சிறிது தூரம் நடந்து சென்ற பிறகு கணவர் வருகிறாரா என்று திரும்பிப் பார்த்தார். ஆனால் கணவரைக் காணவில்லை.

இதனால் கிறிஸ்டைன் கவலைப்படவில்லை. தனது கணவர் வழி தவறி வேறு பக்கமாகச் சென்றிருக்கலாம் என்று நினைத்து சுற்றுப்புறத்தில் தேடினார். ஊஹும்! ஆள் இருப்பதாகவோ நடந்து சென்றதாகவோ ஓர் அடையாளமும் இல்லை. கணவரின் பெயரை உரக்கச் சொல்லி அழைத்தார். ஆனால் எதிரொலியைத் தவிர எதுவும் திரும்பி வரவில்லை.

## மோப்ப நாய் வந்தது

விவரம் அறிந்ததும் மோப்ப நாய் உதவியுடன் போலீஸ் குழு ஒன்று காணாமல் போன ஆலனைத் தேடிப்

புறப்பட்டது. ஏறக்குறைய ஒரு வார காலம் ஓர் இடம் விடாமல் தேடினார்கள். பலன் இல்லை. ஆலன் ஜான்ஸ்டன் எந்த இடத்தில் நின்று கொண்டு புகைப் படங்களை எடுத்தாரோ அந்த இடத்திற்கு மேல் செல்வதற்கு மோப்ப நாய்கள் மறுத்தன. அங்கேயே சுற்றிச் சுற்றி வந்து வானவெளியைப் பார்த்துக் குறைத்தன.

## கணக்கற்ற தடைகள்

ஆலன் ஜான்ஸ்டன் மறைந்த இடம் ரஷ்ய எல்லையை ஒட்டிய இடமாக இருப்பதால் ஒரு வேளை ரஷியச் சிப்பாய்கள் அவரைக் கடத்தியிருக்கலாம் என்ற சந்தேகம் எழுந்தது. ஆனால் ஆலனைப் பற்றித் தனக்கோ தனது படைகளுக்கோ எதுவும் தெரியாது என்று ரஷியப் படைத் தலைவர் கூறியதோடு ஆலனைத் தேடும் முயற்சி யிலும் ஒத்துழைத்தார். கடைசி வரை ஆலன் கிடைக்கவே இல்லை.

லண்டன் நீதி மன்றத்தின் முன் இந்த வழக்கு வந்தபோது என்ன தீர்ப்புச் சொல்வது என்று நீதிபதி களுக்குப் புரியவில்லை. இருந்தபோதிலும் கிடைத்த தகவல்களையும் நிலைமைகளையும் கருத்தில் கொண்டு ஆலன் இறந்துவிட்டதாக அதிகாரபூர்வமாக நீதிமன்றம் அறிவித்து கிறிஸ்டைனுக்கு விவாகரத்து வழங்கியது.

## தனக்குள் கரைந்தாரா?

டேவிட் லாங் என்பவருக்கு ஏற்பட்ட கதியும் ஏறக்குறைய மேலே சொன்னபடிதான் இருந்தது. அவர் ஒரு விவசாயி. அறுவடையான வயலில் குவித்து

வைக்கப்பட்டிருந்த தானியப்போரின் பக்கமாக நடந்து வந்து கொண்டிருந்தார். சுமார் 100 கெஜ தூரம் தான் வந்திருப்பார்.

இதென்ன! திடீரென்று காணாமல் போய் விட்டாரே! மாயமில்லை; மந்திரமில்லை! கண்ணுக்கு எட்டிய தூரம் வரை சமதளமான வெட்ட வெளிதான் நாற்புறமும் இருந்தது. பள்ளமோ-படுகுழியோ-மரமோ எதுவும் சுற்றுப்புறத்தில் இல்லை.

டேவிட்லாங் நடந்து சென்றதையும் திடீரென்று காற்றில் கரைந்து போனதையும் அவருடைய புதல்வர் களைத் தவிர வேறு மூன்று பேர் கண்ணால் பார்த் திருக்கிறார்கள். தாங்கள் கண்டதை வாய்விட்டுக் கூற முடியாத அளவு திக்பிரமை அடைந்து போய்விட்டனர் அவர்கள். காணாமல் போன டேவிட்டைத் தேட ஆரம் பித்தார்கள். எங்கே போய்த் தேடுவது? கண் பார்வையைத் தடைசெய்ய இயலாத அளவுக்குக் கிலோ மீட்டர் கணக்கில் பரந்து விரிந்திருந்த அந்த வயல் வெளியில் தேடுவதற்கு ஒன்றுமே இல்லையே. இவ்வளவு பெரிய வெட்ட வெளியில் எப்படி மறைந்தார்? சூரிய வெளிச்சத்தில் கரைந்து காற்றில் கலந்து விடடாரா?

டேவிட்லாங் காற்றில் கரைந்ததைக் கண்ணால் கண்ட சாட்சியங்கள் பலமானதாக இருந்தன. வயல் வெளியை ஒட்டிய வீட்டிலிருந்து அவர் வெளியேறிய போது அவரது எட்டு வயது மகனும், பதினொரு வயது மகளும் வெளியில் விளையாடிக் கொண்டிருந்தனர் டேவிட்லாங் அவர்களுடன் சிறிது நேரம் பேசிவிட்டுத் தான் வெளியேறினார்.

அப்போது உள்ளூர் மேஜிஸ்ட்ரேட் ஒருவரும் அவரது நண்பரும் குதிரையில் அங்கு வந்தனர். அருகில் வந்து அவரது சிறந்த மகசூலுக்குப் பாராட்டுத் தெரி வித்தனர் டேவிட் புன்முறுவலுடன் அவர்களுக்கு நன்றி தெரிவித்தார். பிறகு மூவரும் அருகருகே நடந்து வநது கொண்டிருந்தார்கள். சிறிது தூரம் கூடச் சென்றிருக்க வில்லை.

தங்களுடன் பேசிக் கொண்டு வந்த டேவிட்லாங்கை காணாமல் மற்ற இருவரும் திகைத்துப் போனார்கள். தங்களைச் சுற்றிலும் அவரைத் தேடினார்கள். ஏன் தங்களுக்குள்ளேயும் கூடத் தேடினார்கள். நாற்புறமும் சுற்றி அலைந்து ஓடித் தேடினார்கள்.

## பறக்கும் தட்டு வந்ததா?

மறைவிடமே இல்லாத அந்த வெட்ட வெளியில் ஆறடி உயரமுள்ள டேவிட் எங்கே மறைந்தார்? என்ன ஆனார்? பறக்கும் தட்டு ஏதேனும் வந்து அவரைக் கடத்திச் சென்றிருக்கலாம் என்று சிலர் கூறினார்கள். அப்படியும் கூறிவிட முடியாது. பறக்கும் தட்டுகள் பகலிலும் வருமா? அப்படியே வந்திருந்தாலும் டேவிட் லாங்குடன் நடந்து சென்று கொண்டிருந்த மற்ற இருவரது கண்களுக்கு எதுவும் தெரியவில்லையே ஏன்? ஏன்?

இனி மற்றொரு சம்பவத்தைக் காண்போம்: 1920-ஆம் ஆண்டு லண்டன் நகரத்தின் மதுக்கடை ஒன்றி லிருந்து வெளிவந்த "விக்டர்க்ரெஸன்" என்பவர் சாலை யோரமாகக் காலாற நடந்து சென்று கொண்டிருந்தார் சாலையில் போவோர்-வருவோர் அனைவரும் தன்

கண்களால் பார்த்துக் கொண்டிருக்கும் போதே க்ரெஸன் காற்றில் கரைந்தது போல் திடீரென்று மறைந்துவிட்டார்.

## பாவம் பாதிரியார்

இது போன்ற மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சிகள் ஏராளம். இந்த வகையில் யார்க்ஷையரின் மேற்குப் பகுதியில் உள்ள ப்ரெட்ஃபோர்ட் நகரில் வசித்து வந்த போலந்து நாட்டுப் பாதிரியார் கெனரி போர்னிஸ்க் என்பவரது மறைவு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

1953-ஆம் ஆண்டு ஜூலை 13-ஆம் தேதி தொலைபேசி ஒலித்தது. பாதிரியார் போர்னிஸ்க் தொலை பேசியை எடுத்துப் பேசினார். பிறகு போலந்து மொழியில் "சரி நான் போகிறேன்" என்று கூறி தொலைபேசியை வைத்துவிட்டு வீட்டை விட்டு வெளியில் புறப்பட்டார்.

வீட்டினர் அனைவரும் தன் கண்களால் பார்த்துக் கொண்டிருக்கும் போதே வீட்டின் முன்புறம் பரந்து கிடந்த புல்வெளியில் 200 கெஜம் நடந்து சென்ற பாதிரியார் திடீரென்று மறைந்தார். அவர் எங்கே போனார்? என்ன ஆனார் என்பது இன்றுவரை யாருக்கும் தெரியாது.

## வீரர்கள் மறைந்த விபரீதம்

ஏதோ ஓரிருவர் காற்றில் கரைந்துபோனால் அது வேறு விஷயம். ஆனால் ஒரே சமயம் பல மக்கள் அதுவும் படைவீரர்கள் ஆயிரக்கணக்கில் காற்றில் கரைந்து காணாமல் போனார்கள் என்பதை நீங்கள் கேள்விப் பட்டதுண்டா?

1933-ஆம் ஆண்டு சீனாவுக்கும்-ஜப்பானுக்கும் இடையில் போர் நடந்தது. நான்கிங் நகரத்திற்கு இரண்டு மைல் தொலைவில் 3000 சீனப்போர் வீரர்கள் தங்கியிருந்தனர். கம்பியில்லாத் தந்திமூலம் அவர்களுக்கும் நகரத்திலிருந்த தலைமையகத்திற்கும் இடையில் செய்திப் பரிமாற்றம் நடந்து கொண்டிருந்தது.

அப்போது ஒரு நாள் திடீரென்று தலைமையகத்துடன் இருந்தத் தொடர்பு அறுபட்டது. தொடர்பு அறுந்த சூழ்நிலை மிகவும் கவலைக்கிடமானதாக இருந்ததால் பரபரப்படைந்த ராணுவத் தலைமையகம் உடனே உயர் அதிகாரிகள் குழு ஒன்றை அனுப்பி வைத்தது. காலதாமதம் செய்யாமல் விரைந்து வந்து சேர்ந்த அந்தக் குழு திகைத்து நின்றது. காரணம்?

யாரையுமே காணவில்லையே!

முகாமுக்குச் சில கெஜ தூரத்திலிருந்த அவுட் போஸ்ட்டுக்குப் போயிருந்த இரண்டே இரண்டு போர் வீரர்களைத் தவிர மற்ற வீரர்கள் அனைவரும் காணாமல் போயிருந்தனர்.

அவர்கள் அங்கு இருந்ததற்கான அடையாளம் எதுவுமே இல்லை. போர்க் கருவிகள், தளவாடம்-வெடி மருந்துகள் ஆகிய அனைத்தும் வைத்தபடியே இருந்தன. திடீர்த்தாக்குதல் நடந்து அனைவரும் கொல்லப்பட்டார்களா? என்றால் அதற்கான அடையாளமும் இல்லை.

முகாமுக்கு வெளியே நடந்தோ-ஊர்ந்தோ, ராணுவ வண்டிகள் மூலமோ வெளியேறியதற்கான அடையாளமும்

காணப்படவில்லை. முகாமினுடைய அனைத்து வண்டிகளும் பத்திரமாக இருந்தன. வெளியிலிருந்து யாரும் வந்த தடயமும் இல்லை. விமானம் மூலம் வெளியேறவும் வழியில்லை. இருபது நிமிடங்களுக்குள் அனைவரும் எங்கே சென்றார்கள்? அவர்களுக்கு என்ன ஆயிற்று? இது இன்று வரை புரியாத மர்மம்!

## ஆயுதங்கள் மறைந்த அதிசயம்

உயிரும் உதிரமும் உள்ள மனிதர்கள் இப்படி ஆயிரக்கணக்கில் காணாமல் போவது அதிசயம் என்றால் உலோகத்தினால் ஆன பொருள்கள் காணாமல் போவதை என்னவென்று சொல்வது! பல ஆண்டுகளுக்கு முன்பு 650 போர் வீரர்களைக் கொண்ட பிரெஞ்சு ராணுவக் குழு ஒன்று சைகோனுக்கு 15 மைல் தொலைவில் அப்படியே காணாமல் போய்விட்டது. ராணுவத் தளவாடங்கள் ஜீப் லாரி ட்ரக்குகள் அனைத்தும் மறைந்துவிட்டன.

1906-க்கும் 1914-க்குமிடையில் ஸ்பெயினில் நடைபெற்ற ஒரு போரிலும் இதே மாதிரி சம்பவம். மக்கள் ஒட்டுமொத்தமாகப் பெரிய அளவிலே காணாமல் போன வகையில் இந்தச் சம்பவமும் முக்கியத்துவம் வாய்ந்தது.

## இன்னும் நடக்கிறார்கள்

பயிற்சி பெற்ற 4000 ஸ்பானிஷ் படை வீரர்கள் கால் நடையாகச் சென்று கொண்டிருந்தார்கள். இரவில் ஒரு நீருற்றின் அருகில் முகாமிட்டார்கள். காலையில் முகாமைக் கலைத்து விட்டு போய்ச் சேர வேண்டிய இலக்கை நோக்கி நடக்க ஆரம்பித்தார்கள் ஆனால் இன்று வரையில் அவர்கள் இலக்குக்கு வந்து சேரவில்லை சீன வீரர்

களுக்கு நேர்ந்த கதிதான் இவர்களுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்த 4000 வீரர்களும் ஒட்டு மொத்தமாக மறைந்துவிட்டார்கள்.

1977-ஆம் ஆண்டு அக்டோபர் 17-ஆம் தேதி மொரீஷியஸ் தீவிலுள்ள ஜகத் முராரி என்ற விவசாயி தனது பக்கத்து வீட்டுக்காரரின் அழைப்புக்கிணங்கி அவரது வீட்டுக்குச் சென்றார். முராரி செல்வதை அவரது மனைவியும் சேகர்-ஷப்னம் என்ற இரு குழந்தைகளும் பார்த்துக் கொண்டிருந்தனர். சரியாகப் பன்னிரண்டு அடிதான் அவர் நடந்து சென்றார். பிறகு தனது குடும்பத்தினர் எதிரிலேயே திடீரென்று மறைந்துவிட்டார். அவரது குடும்பத்தினர் உடனே பயத்தால் அலறிக் கொண்டு அந்த இடத்திற்கு ஓடினார்கள். தனது வீட்டிலிருந்தே இதைப் பார்த்துத் திகைத்துப்போன பக்கத்து வீட்டுக்காரரும் ஓடி வந்தார். அழகான புல் தரையைத் தவிர அங்கு ஒன்றும் இல்லை.

## மஞ்சள் வட்டம்

முராரி மறைந்த இடத்தில் மட்டும் வெயில் சற்று மஞ்சள் நிறமாகக் காய்ந்தது. பிறகு அதுவும் சில நிமிடங்களில் மாறிவிட்டது. அந்த மஞ்சள் வெயில் சுமார் 15 அடி அளவுள்ள வட்டமாகக் காய்ந்ததாக பக்கத்து வீட்டுக்காரர் தெரிவித்தார்.

போலீஸ் அழைக்கப்பட்டது. அவர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அரசாங்கம் புவியியல் நிபுணர்களிடம் இந்த வழக்கை ஒப்படைத்தது. அவர்களும் எதுவும் செய்ய இயலாமல் விழித்தனர்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த சில தினங்களில் எங்கிருந்தோ முராரியின் குரல் கேடடது. "என்னைக் காப்பாற்றுங்கள். எனக்கு உதவி செய்யுங்கள். சேகர்-ஷப்னம் என்னிடம் வாருங்கள்" என்று அவர் அலறும் ஓசை மிகவும் உள்ளடங்கி ஒலித்தது. ஆனால் அந்த ஓசை வரும் இடத்தை யாராலும் அறிய முடியவில்லை. சில தினங்கள் மட்டுமே ஒலித்த அந்தக் குரலும் நிரந்தரமாக நின்றுவிட்டது. தனது கணவர் முராரி என்றேனும் ஒரு நாள் வருவார் என்ற நம்பிக்கையுடன் அந்த மனைவி வாழ்ந்து வருகிறார்.

## குழந்தைகள் கூட...

பெரியவர்களைப் போலக் குழந்தைகளும்கூட மர்மமான முறையில் காற்றில் கரைந்து போனதுண்டு. 1957-ஆம் ஆண்டு மார்ச் 23-ஆம் தேதி டொனால்டு பாக்கர் மற்றும் பிரெண்டா ஹாவெல் என்ற சிறுவர்கள் தங்கள் சைக்கிளில் வேகமாக வந்து கொண்டிருந்தனர். இருட்டு வதற்குள் வீடு திரும்ப வேண்டும் என்ற அவசரம் அவர் களுக்கு. ஆனால் அவர்கள் வீட்டுக்கு வரவே இல்லை. அவர்களது சைக்கிளோ-அல்லது உடலோ-உடையோ-அல்லது ஏதேனும் நம்பகமான தகவலோ எதுவும் இன்று வரையில் இல்லை.

இதைத் தவிர தங்களது பெற்றோர்களின் கண் ணெதிரிலேயே மறைந்து போன சிறுவர் சிறுமியர் ஏராளம்.

## முடிவு என்ன?

கப்பல்கள்-விமானங்கள்-மனிதர்கள் ஆகியோர் இப்படி திடீரென்று இந்த உலகிலிருந்து மறைகிறார்கள்

என்றால் நிச்சயம் அவர்கள் வேறு ஓர் இடத்தில் இருக்கத் தானே வேண்டும்? அது என்ன இடம்?

மொரீஷியஸ் நாட்டில் மறைந்து போன ஜகத் முராரியின் குரல் எங்கிருந்து கேட்டது? நிச்சயம் எங்கேயோ கண்ணுக்குத் தெரியாத இடத்தில் அவர் இருந்திருக்கிறார் என்று தானே அர்த்தம்? இல்லாவிட்டால் அவரது குரல் ஒலிப்பதற்கு வாய்ப்பு இல்லையே? சிந்தித்துப் பாருங்கள்.

காணாமல் போன அந்த மனிதர்கள் கொலை செய்யப்பட்டதற்கோ-கடத்தப்பட்டதற்கோ ஆதாரம் இல்லை. மற்றவர்கள் பார்க்கும் போதே திடீரென்று மறைந் திருக்கிறார்கள்.

அதேபோல கப்பல்களும்-விமானங்களும் அதிலிருந்த மனிதர்களுடன் அப்படியே ஒரு விநாடியில் மறைந்துள்ளன. இந்தப் புத்தகத்தை மீண்டும் ஒரு முறை படித்துப் பாருங்கள். எந்த விதமான விஞ்ஞான விளக்கங் களும் தர இயலாத நிலையில் அமானுஷ்யமான முறையில் அவை மறைந்திருப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

இந்த உலகில் எந்த இடத்திலும் இல்லாத வகையில் அவை மறைந்துவிட்டிருந்தால் இப்போது எங்கேதான் இருக்கக்கூடும்? நம் கண்ணுக்குப் புலப்படாத சூட்சும உலகங்கள் இருக்கின்றதா என்று சிந்திக்கிறீர்களா?

அதையே கொஞ்சம் மாற்றி ஏன் இருக்கக் கூடாது என்று சிந்தனை செய்யுங்கள்! அப்படிச் சிந்தித்துக் கொண்டே அடுத்த அத்தியாயம் வாருங்கள்

# 7. சூட்சும உலகம் பற்றிய விஞ்ஞான விளக்கங்கள்

**க**ண்ணிற்குத் தெரியாத சூட்சும உலகம் ஒன்று உண்டா? அந்த உலகைப் பற்றி அறிஞர்கள் என்ன சொல்லுகிறார்கள்?

இந்த உலகில் உள்ள எந்தப் பொருளும் அழிவதில்லை. அதாவது ஒரு மூலகம் மற்றொரு மூலகமாகத் தான் மாறுமே தவிர முற்றிலும் இல்லாது போவதில்லை. அதே போல காணாமல் போனவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் எங்கோ நிச்சயம் இருக்கிறார்களே தவிர இல்லாமல் அழிந்து விடவில்லை.

இப்படி இவர்கள் மாயமாய் மறைவதற்குக் காரணம் என்ன? கப்பல்கள் விமானங்கள் யாவும் எங்கே போய் விட்டன? வேறு உலகத்தால் கவர்ந்து இழுக்கப்படடனவா?

ஆம், அவை யாவும் இந்த உலகிலிருந்து மற்றோர் உலகிற்கு ஈர்க்கப்பட்டுப் போய்விடடன இதற்கு நேரப் பிளவு தான் **(Split in Time)** காரணம்.

## எதிர்மறையான பொருள்

பிரிட்டிஷ் பௌதிக விஞ்ஞானி ஒருவர் எதிர் மறையான பொருள் (Anti-Matter) என்ற ஒன்று இருப்பதைக் கண்டுபிடித்தார் அதையே கார்ல் ஆண்டர்ஸன் என்ற அமெரிக்கர் விரிவாக ஆராய்ந்து நோபல் பரிசும் பெற்றார்.

இவர் பிரபஞ்ச வெளிக் கதிர்களில் (Cosmic Rays) விநோதமான எலக்ட்ரான்கள் இருப்பதைக் கண்டு பிடித்தார். அந்த எலக்ட்ரான்கள் பூமியில் உள்ள எலக்ட் ரான்களுக்கு நேர் எதிரான முறையில் இயங்குவதைக் கண்டார்.

### பயங்கர அதிர்ச்சி

அப்படி நேர் எதிரான முறையில் இயங்கும் எலக்ட் ரான்களைக் கொண்ட எதிர்மறையான ஜடப் பொருள் பூமியின் மீது விழுந்தால் பயங்கரமான அதிர்ச்சியை அது உண்டாக்கும் என்பதையும் அவர் கண்டுபிடித்தார்.

அத்தகைய எதிர்மறையான ஜடப்பொருள் ஒன்று சைபீரியாவின் பாழ் வெளியில் 1908-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 30-ஆம் தேதி விழுந்து மிகவும் பயங் கரமான சத்தத்தையும் அதிர்ச்சியையும் உண்டாக்கி யுள்ளதாக ஆதாரங்கள் தெரிவிக்கின்றன.

ஒரு கால் பந்தின் (Foot-Ball) அளவே உள்ள இந்த ஜடப் பொருள் எப்படியோ தவறி விழுந்ததில் உண்டான வெடிச் சத்தம் 500 மைல்களுக்குக் கேட்டது இந்த

அதிர்ச்சியில் 40 மைல்களுக்கு அப்பால் இருந்த கிராமத்தின் மக்கள் கூடத் தூக்கி எறியப்பட்டனர். வீடுகள் இடிந்தன.

இந்த எதிர்மறையான ஜடப் பொருள் புவிஈர்ப்பு சக்திக்கு நேர் எதிராக இயங்குகிறது. அதில் ஒரு பட்டாணி அளவு எடுத்து அதைக் கட்டுப்படுத்தி விண்வெளி கலத்திற்குப் பயன்படுத்தினால் போதும் அண்டவெளி அனைத்தையும் சுற்றி விட்டு வரும் அளவு எரிபொருள் சக்தி கிடைக்கும்.

## எதிர்மறையான உலகம்

எதிர்மறையான ஜடப்பொருள் இருப்பது (Anti-Matter) விஞ்ஞானிகளால் நிரூபிக்கப்பட்டதால் அத்தகைய பொருள்களால் ஆன எதிர்மறையான ஓர் உலகமும் நிச்சயம் இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. கண் ணுக்குப் புலப்படாத அந்த உலகத்தைத்தான் நம் முன்னோர்கள் சூட்சும உலகம்-புற உலகம்-ஆவி உலகம் என்று பல பெயர்களில் அழைத்தார்கள்.

## இதற்கு விளக்கம்

வெளிச்சம் இருக்கும்போது இருள் இருக்காது. இருள் இருக்கும்போது வெளிச்சம் இருக்காது. இரண்டும் நேர் எதிரானவை. ஒன்று இருக்கும் போது மற்றது புலப்படாது.

அதைப் போலவே உலகிலுள்ள ஜடப் பொருளுக்கு (Matter) நேர் எதிர்மறையான பொருள்கள் (Anti-Matter) கொண்ட ஓர் உலகம் இந்த உலகில் இருப்பவர்களின் புலன் களுக்கு அகப்படாது. ஆயினும் அப்படிப்பட்ட ஓர்

சூட்சும உலகம் இருக்க வேண்டும் என்பதை எதிர் மறையான அந்தப் பொருள் இருப்பதைக் கொண்டு உணரலாம்.

## மனிதர்கள் மறையும் மாயம்

இந்த உலகிலிருந்து திடீரென்று மறையும் கப்பல் களும் விமானங்களும் அந்த எதிர் மறையான சூட்சும உலகிற்கு ஈர்க்கப்பட்டு தான் போய்விடுகின்றன. உதாரண மாக இரண்டு பெரிய பந்துகளை எடுத்துக் கொள்வோம். அவை இரண்டும் ஒன்றுக்கொன்று எதிர்மாறான திசை களில் சுழன்று கொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த இரண்டு பந்துகளிலும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் சிறிய பள்ளம் அல்லது குழி இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அந்தக் குழியில் ஓர் எறும்போ ஈயோ இருப்பதாகவும் கொள்வோம்.

அந்த இரண்டு பந்துகளும் ஒன்றுக்கொன்று எதிர் திசையில் வேகமாகச் சுழலும்போது ஒரு கால கட்டத்தில் இரண்டு பந்துகளிலும் உள்ள குழிகள் எதிரும் புதிருமாக வரும் வாய்ப்பு ஏற்படுகிறது. அப்போது ஒரு பந்தின் சுழற்சி வேகத்தில் அதன் குழியில் உள்ள ஈயோ எறும்போ மற்றொரு பந்தின் குழிக்குள் ஈர்க்கப்பட்டு விடுகிறது.

இப்படித்தான் கப்பல்களும் விமானங்களும் இந்த உலகிலிருந்து எதிர்மறையான சூட்சும உலகிற்கு ஈர்க்கப் பட்டுப் போய் இருக்க வேண்டும்.

இதை நம்ப முடியவில்லையா? அப்படியானால் பின்வரும் விளக்கத்தைப் படியுங்கள்.

## முப்பரிமான உலகம்

நாம் முப்பரிமான உலகில் (Three Dimensional World) வாழ்ந்து வருகிறோம். இந்த மூன்று பரிமாணங்களுக்கும் மேற்பட்ட பரிமாணங்கள் இந்தப் பிரபஞ்சத்தில் இருக்கின்றன.

பரிமாணம் என்றால் என்ன?

தண்டவாளத்தின் மீது ஓடும் ரயில் வண்டியை ஒரு பரிமாணத்திற்கு (One Dimension) உதாரணமாகச் சொல்லலாம். ரயிலானது தண்டவாளத்தின் மீது முன்னாலும் போகும். பின்னாலும் போகும். ஆனால் பக்க வாட்டில் போகாது.

கடலில் செல்லும் கப்பலை இரண்டு பரிமாணங்களுக்கு (Two Dimension) உதாரணமாக்கலாம். கப்பல் தண்ணீரில் முன்-பின்-பக்கம் ஆகியவற்றில் போக முடியும்.

ஆகாய விமானத்தை மூன்று பரிமாணங்களுக்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். விமானம் முன்னால் போகும். அதோடு மேலேயும் போகும். கீழேயும் இறங்கி வர முடியும்.

இப்படி நீளம், அகலம், உயரம் (அல்லது பருமன்) என்ற மூன்று பரிமாண உலகில் வாழும் நமக்கு நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து என்ற கணக்கற்ற பரிமாணங்கள் இருப்பது தெரியவில்லை.

## உதாரணம்

உதாரணத்திற்கு ஓர் இசைத்தட்டை எடுத்துக் கொள்வோம். அதற்குரிய வேகத்தில் இசைத்தட்டை சுழல விட்டால் பாட்டின் சொற்கள் தெளிவாக இயல்பாகக் கேட்கும். வேகமாகச் சுழலவிட்டால் சொற்கள் தெளி வில்லாமலும் கூச்சலாகவும் கேட்கும். மேலும் மேலும் அதிக வேகத்தில் சுழலவிட்டால் பாட்டின் சப்தமே கேட்காமல் போய்விடும்.

இதைப்போல மிகமிக வேகமாகத் துடிக்கும் சலனத்துடிப்பு அலைகளைக் கொண்ட **(Vibrations)** அகச் சிவப்புக் கதிர்களையும் நம்மால் பார்க்க முடிவதில்லை. முப்பரிமாண இந்த உலகத்தில் துடிப்பு அலைகள் ஒரு குறிப்பிட்ட வேகத்தைக் கொண்டிருக்கின்றன. அந்த வேகத்திற்கு உட்பட்ட நமக்கு இந்த மூன்று பரிமாண உலகு மட்டுமே தெரிகிறது. அந்த வேகத்தைவிடப் பன்மடங்கு அதிகவேகமுள்ள துடிப்பு அலைகள் கணக்கற்ற பரி மாணங்களை ஏற்படுத்துகின்றன. அத்தகைய பரிமாண உலகங்களையோ அவற்றிலுள்ள உயிர்களையோ நம்மால் புரிந்துகொள்ள முடியாது.

வாசகர்களே நன்கு சிந்தனை செய்யுங்கள். இந்த உலகில் நம் கண்ணெதிரில் ஒரு விமானம் புறப்பட்டுக் காற்றில் மிதந்து சென்றால் அதை அலட்சியமாகப் பார்க்கிறோம். ஆனால் ஒரு தனிமனிதன் அதேபோல பறந்தால் அது அற்புதம் என்கிறோம். அல்லது ஏமாற்று வேலை என்கிறோம். விமானம் பௌதிக விதிகளுக்கு [illegible]டு மேலே பறப்பதைப் போல இந்த மனிதனும் ஏன்

குறிப்பிட்ட விதிகளுக்கு உட்பட்டு செயலாற்றியிருக்கக் கூடாது என்று நாம் சிந்திப்பதில்லை.

ஆனால் உண்மையே அதுதான். இந்த பிரபஞ்சத்தில் நிகழும் அனைத்து அமானுஷ்ய இயக்கங்களும் இயற்கை விதிகளுக்கு உட்பட்டுத்தான் நிகழ்கின்றன ஆனால் அவற்றில் பலவற்றை இன்றைய விஞ்ஞானம் கண்டு கொள்வதே இல்லை.

அவற்றை முழுமையாக ஆராய ஆரம்பித்தால் நமது முன்னோர்கள் கூறிய பல ரகசியங்கள் நமக்குப் புரிய ஆரம்பிக்கும்.

அந்த நாள் விரைவில் வர வேண்டும் என்று முருகனிடம் வேண்டிக் கொள்கிறோம். வாசகர்களே! அடுத்த புத்தகத்தில் சந்திப்போமா.

**வணக்கம்**

❑❑❑